ளைத் தன்மை ஆராய்ச்சி

# CHILD STUDY

G. E. CHANDLER








CHRISTIAN LITERATURE SOCIETY FOR INDIA

MADRAS ALLAHABAD RANGOON COLOMBO

1929

# பொருள் அட்டவணை

# CHILD STUDY

# பிள்ளைத் தன்மை ஆராய்ச்சி

## I. முகவுரை

தற்காலத்தில் பல உபாத்தியாயர்கள் கிண்டர் கார்ட்டன் முறையை ஸ்தாபித்தவருடைய நோக்கங்களையும் ஏற்பாடு களையும் ஆராய்ந்து பார்த்துப் பற்பல அபிப்பிராயங்களை வெளியிட்டிருக்கிறார்கள். இக்காரியத்திற்காக நாம் எல் லோரும் கிண்டர்கார்ட்டன் முறையை ஸ்தாபித்தவருக்கு நன்றி பாராட்டினவர்களாயிருக்கவேண்டும். ஏனெனின், மு..ன் முதலில் பிள்ளை..ின் தன்மை மிகவும் வித்தியாச மானதென்றும் அதை ..ாய்வது மிகவும் அவசியம் என் றும் காட்டினவர் அவரே.

முற்காலத்தில் உபாத்தியாயர்கள் தங்களுக்குத் தெரிந் தவை யாவற்றையும், வெறும் குடங்களில் தண்ணீரை ஊற்றி நிறைப்பதுபோல, பிள்ளைகளுக்குப் புகட்டுவதினாலேயே ..ங்கள் கடமை நிறைவேறிவிட்டதென நினைத்திருந்தனர். ..ல் இந்நாட்களில் உள்ள உபாத்தியாயர்களின் முதல் ..க்கம் தங்கள் அறிவை மாணவர்க்குக் காட்டுவது அன்று. ..வில், பிள்ளைகளை அறிந்து அவர்களுடைய யோசனைகளை .. வழக்கங்களையும் வெளியிடவேண்டும். பிள்ளைகள் எல் ..லாரும் ஒரே மாதிரியாய் வளரமாட்டார்கள். ஏதாவது ..ரு வழியைக் குறிப்..டு அதிலே தான் நடக்க வேண்டு.. ..வ நாம் சிறுவ.. ..வற்புறுத்த முயன்றால், அவ..

களது சுய தன்மையை கெடுத்துவிடுகிறோம். ஒரு தோட்ட காரன் தன் தோட்டத்திலிருக்கும் ஒவ்வொரு சிறு செடியை யும் சோதித்து அவற்றிற்கு எது அவசியம் என்று கண்டு அந்தந்தச் செடியின் நிலைமைக்குத் தக்கவாறு அவற்றிற்கு தண்ணீர் ஊற்றியும் நிழல் கொடுத்தும் உரம் இட்டும் வருவான். நாம் அந்தத் தோட்டக்காரனைப்போல நம்மு டைய வகுப்புக்களில் படிக்கிற பிள்ளைகளுக்காக கவலைப்படு கிறோமோ?

இந்தியா தேசத்தில் அநேகர் மிக்க சிறப்புவாய்ந்த உபாத் தியாயர்தொழிலை மிகுந்த மன விருப்பத்தோடு செய்யாது, மற்றவர்களுடைய கட்டாயத்தினால் செய்கின்றனர். இது ஒரு பெருங்குறைவேயாம். ஏனென்றால் அவர்கள் தம் தொழிலின் சிலாக்கியத்தை நினையாமல் அதனை ஓர் நிர்ப பந்தமான கடமை என்று கருதுகின்றனர்; ஆதலால் அவர்கள் சிறுவரின் தன்மையை ஆராய்ந்து போதிக்கும் முறையின் மகிமையை வெறுக்கின்றனர். மற்றெல்லா சாஸ் திரங்களைப் பார்க்கிலும் ஒரு சிறு பிள்ளையின் தன்மையை ஆராய்வது அதிக ஆச்சரியமானது. ஒவ்வொரு உபாத்தி யாயருக்கும் இந்த சிலாக்கியம் கிடைத்திருக்கிறது.

---

# உபாத்தியாயரின் பிரமாணம்

சிறுவர் விதைப்பதை மனிதர் அறுப்பார் என்பதை விசுவாசிக்கிறேன். வருங்காலத்தில் ஸ்திரீ புருஷர் என்னும் நிலைமையில் வாழப்போகிற வாலிபர்களை விசுவாசிக்கிறேன். அறிவின்மை பெரும் சாபம் என்றும், கல்வி சிறந்த நன்மையுமென்றும், உபாத்தியாயரது தொழில் மிக்க மாட்சிமையானதென்றும், உத்தியோகம் இன்பம் என்றும் விசுவாசிக்கிறேன். அச்சடிக்கப்பட்ட புத்தகங்களின் மூலமாய் வெளிப்படுகிற ஞானத்தையும், ஜீவியத்தினால் உணரப்படும் சத்தியத்தையும், சட்டத்தினால் கற்பிக்கப்படும் பாடங்களையும் நம்புவதோடு, மாதிரியினால் காட்டப்படும் பாடங்களையும் நம்புகிறேன். யோசிக்கும் சக்தியோடு கையினது வேலைத்திறமையையும் ஜீவியத்தில் சந்தோஷம் தருகின்றவைகளையும் விசுவாசிக்கிறேன். வகுப்பறையிலும் வீட்டிலும் ஜீவியத்தை ஒட்டிய ஒவ்வொரு விஷயத்திலும் அழகையே பார்க்க வேண்டும் என்று கருதுகிறேன். மகிழ்ச்சி, அன்பு, விசுவாசம், மேலான நோக்கங்கள் என்பனவற்றை உயிர்ப்பிக்கின்ற ஆசைகளையும் நம்புகின்றேன். நாடோறும், ஒவ்வொரு மணிநேரத்திலும் நாம் இருக்கும் தன்மைக்கும் செய்யும் செய்கைக்கும் ஏற்றபடி பலன் அடைகிறோம் என்பதையும், தற்காலம் ஏற்பட்டிருக்கும் சிலாக்கியத்தையும் வருங்காலத்தைப்பற்றிய நம்பிக்கையையும் வாழ்க்கையில் உண்டாகும் பேரானந்தத்தையும் விசுவாசிக்கிறேன்.

---

## II. இயற்கையான குணங்கள்

“தாயைப்போல பிள்ளை; நூலைப்போல சேலை” என்னும் பழமொழியை நாம் பல தருணங்களிலும் வழங்கிவருகிறோமெனினும், அதில் அடங்கியிருக்கும் உண்மையை மறந்து போகிறோம். ஆனால், சிறு பிள்ளைகளின் போதனைமுறையைக் குறித்துச் சிந்திக்கும்பொழுதோ சிறு பிள்ளைகளின் கல்விப்பயிற்சி அவர்கள் பிறப்பதற்கும் முன்னமேயே தொடங்கிவிடுகின்றதென நிச்சயமாய்த் தெரிந்துகொள்ளலாம். ஒரு குழந்தையினிடம் ஏதாவது ஒரு கெட்ட குணத்தைப் பார்க்கும்பொழுது, “அது அக்குழந்தையின் தாயினது குணம்” என்றாவது, “என்னசெய்யலாம், அந்தக் குழந்தையின் பாட்டன் முதலானவர்களும் அப்படியேயிருந்தார்கள்” என்றாவது சொல்லிவிட்டு, பிள்ளையைத் திருத்துகிற விஷயத்தில் பின்வாங்குகிறோம். இது சரியன்று. புதிதாய்ப் பிறக்கின்ற சந்ததிகள் நமது குணங்களையும் குறைவுகளையும் அடைதல் கூடுமென்ற உணர்ச்சியோடு நாம் சரீர பலத்தையும் மனதின் அற்புதத் தன்மைகளையும் ஆத்மாவின் அநுபவங்களையும் ஏராளமாய்க் கொடுப்பதற்கு ஆயத்தமாய் இருக்கவேண்டும். தாய் தன் பிள்ளையின் சரீரப் போஷிப்பிற்காகவும் தேக சுகத்திற்காகவும் மிகவும் கவலைப்பட்டுத் தன் பிள்ளையைக் கண்ணுங்கருத்துமாய்ப் பராமரித்துவரலாம். ஆனால், பிள்ளையின் மன விஷயமாகவும் ஆத்மவிஷயமாகவும் சற்றேனும் கவலைப்படாமல் இருந்துவிடுவாள். ப்ரோபல் என்பவருடைய தாய் அவரோடுகூட ஒன்பது மாதகாலந்தான் இருந்தாள். என்றாலும், அவள் அவ்வளவு சிறிய காலத்திற்குள், உலக மெங்குமுள்ள பல குழந்தைகளின் மனவிருப்பங்களை அறிந்துகொண்ட அப் பெரியவருக்குச் சிறு வயதிலேயே தன் குணங்களையும்

ஆசைகளையும் விருப்பங்களையும் ஊட்டிப் பெரும் பொக்கிஷ மளித்துப் பின் தன் உயிரைக் கொடுத்தாள். நாமும் இதே நோக்கத்தைக் கொண்டவர்களாகி, நமது புதிய சந்ததியாருக்கு உறுதியான அஸ்திபாரமிடும்பொருட்டு நமது மனத்தை அடக்கி ஆசைகளைச் சீர்திருத்திப் பரிசுத்த ஜீவியத்தை அடையவேண்டும்.

சிறு பிள்ளைகள் எல்லோரும் இவ்வுலகத்தில் பிரவேசிக்கும்பொழுது இயற்கையான சுபாவத்தோடு தோன்றி தத்தமக்கான சில காரியங்களைச் செய்வார்கள். அப்படிச் செய்வதின் காரணம் என்னவென்று அவர்களுக்கே தெரியாது. ஒரு கோழிக்குஞ்சு முட்டையினின்று வெளிப்பட்டதும் தன் இயல்பிலேயே இரை பொறுக்குகின்றது. அப்படிச் செய்யவேண்டுமென்று யாராவது அதற்குக் கற்றுக்கொடுத்தார்களா? இல்லையே. அப்படியே, சிறு பிள்ளைகளும் இன்னது செய்யவேண்டுமென் றறியாமலே பல காரியங்களைச் செய்கிறார்கள்; ஒரு பகட்டான பந்தைக் கண்டால் உடனே அதையடையக் கையை நீட்டுகிறார்கள்; தங்களுக்கு விருப்பமில்லாத சத்தத்தைக் கேட்டுக் கத்துகிறார்கள்; விளக்கு வெளிச்சத்தைக் கண்டு கண்ணைமூடிக்கொள்கிறார்கள். அற்புதமான யந்திரங்களைப்போலவே நம்முடைய நரம்புகளும் ஏதேனும் ஓர் எழுப்புதல் உண்டானவுடனே அதற்கொத்த இயக்கத்தையும் உண்டுபண்ணுகின்றன. இத்தகைய இயற்கைத் தன்மைகளைச் சிறு பிள்ளைகளின் பொக்கிஷம் என்றே சொல்லலாம். இத்தன்மைகள் சிறு வயதிலேயே வெளிப்படா. அவை சிறிது சிறிதாகக் கிரமமாய் வெளிப்படும். ஆதலால், சிறு பிள்ளைகளை நடத்தும் பெரியோர் யாவரும் இவ்வியற்கைத் தன்மைகளின் இயல்பை ஆராய்ந்து பார்த்து, இத்தன்மைகள் எம்மட்டும் பிள்ளைகளுக்கு உதவியாயிருக்குமோ அம்மட்டும் தாமாகவே தமது தன்மைகளை வெளிப்படுத்திக்கொள்ளும்படி அவர்களை விட்டுவிடுவார்கள். நாம்

பிள்ளைகளிடம் அமைந்துள்ள இயற்கையான தன்மையினால் அவர்களுக்குத் தீமை விளையும் என்று கண்டால் உடனே அவற்றை மாற்றும் உபாயத்தைக் கற்றுக்கொள்ளவேண்டும்.

சிறு பிள்ளைகளிடத்தில் காணப்படும் இயற்கைத் தன்மைகள் பன்னிரண்டு பிரிவாக அமையும். அவற்றுள் முதலாறு தன்மைகள் பிள்ளைகளின் இளம்பருவத்தில் வெளிப்படுவன; அவர்கள் தனிமையாய் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது அவை வெளிப்படுவனவாம்.

## 1. உடம்பின் அசைவு.

பிள்ளைகள் முதல் இரண்டு வருஷங்களில் வரவரத் தலையை உயர்த்தியும் நீந்தியும் தவழ்ந்தும் உட்கார்ந்தும் நின்றும் நடந்தும் ஓடியும் குதித்தும் விழுந்தும் ஆடியும் உதைத்தும் பிடித்தும் எறிந்தும் பலவகையாகத் தம் உடலை அசைப்பார்கள். சிறு பிள்ளைகளுக்கு அசைவற்றிருப்பது முடியாத காரியம். இப்பருவத்தில் பிள்ளைகளுக்குப் போதுமான இடமும் திருப்திகரமான விளையாட்டுச் சாமான்களுமிருந்தால், அவர்கள் வெகுநேரம் தன்னந்தனிமையாக தம்மிஷ்டப்படி விளையாடிக்கொண்டிருப்பார்கள். நாம் சொற்களால் நம் உட்கருத்தை வெளியிடுதல்போலவே பிள்ளைகளும் தம் அசைவுகளை அடக்கிக்கொண்டு தமக்குத் தெ[illegible]டியே ஓடி ஆடிக்குதித்துப் பற்பல சரீர அப்பியாசங்களின் மூலமாய்த் தம் எண்ணங்களை வெளிப்படுத்துகின்றார்கள். இதனாலேதான் நாம் பல விதமான இராகங்களைப் பிள்ளைகளின் காதுகளில் தொனிக்கச் செய்கிறோம்; ஒவ்வொரு இராகத்திற்கும் என்ன என்ன அசைவுகள் ஏற்படுமோ அவற்றைச்செய்து காட்ட நாம் பிள்ளைகளை விட்டுவிடுகின்றோம்; நாம் பிள்ளைகளுக்கு அபிநயத்தோடுகூடிய பல பாடல்களைப் படிப்பிக்கிறோம்; இதன் பின்பு, பிள்ளைகளுக்குக் கை பழக்கமும் அதிக [illegible]யம்

என்று அறியலாகும். ஆனால் கைவிரல்களுக்கு மாத்திரம் சற்றே கஷ்டமான அப்பியாசங்கள் கொடுப்பதினால் தீமை விளையும் தம் கைகளையெல்லாம் ஆட்டி இன்னும் சற்றே கஷ்டமான பெரிய அசைவுகளைச் செய்யப் பிள்ளைகளை விட்டுவிடும்பொழுது அவர்கள் தம் உடம்பை அடக்கியாளக் கற்றுக்கொள்ளுகிறார்கள்.

உதாரணமாக, பிள்ளைகள், தங்கள் வீட்டிலும் வகுப்பறையிலும், தரையைப் பெருக்குதல், சிறு மேசைகளை வைக்கவேண்டிய இடங்களில் ஒழுங்காய்த் தூக்கிவைத்துத் துடைத்தல், தோட்டத்துக்கு வேண்டிய தண்ணீர் கொண்டு வந்து ஊற்றுதல், வெளி இடங்களையெல்லாம் சுத்தம் பண்ணுதல், இவைபோன்ற பல வேலைகளினால் அவரது கைகளுக்கு அப்பியாசமும் நற்பழக்க வழக்கங்களும் உண்டாகின்றன. ஊஞ்சல் ஆடுதல், படிக்கட்டுகளில் ஏறி இறங்குதல், பெரிய கட்டைகளை யடுக்கிக் கோபுரம் கட்டுதல், ஆணிகளைப் பலகையில் அடித்தல் முதலியனபோன்ற பல வேலைகளால் புயங்களுக்குச் சரியான அப்பியாசம் ஏற்படுகின்றது.

ஒரு வகுப்பறையில் சன்னல்கள் எல்லாம் அதிக உயரமாய் இருந்தன. அங்கிருந்த பிள்ளைகளுக்கு வெளியே எட்டிப்பார்க்கமுடியவில்லை. ஆகையால் உபாத்தினியம்மாள் அங்கு ஒரு ஜன்னலுக்கு மூன்று படிக்கட்டுகள் அமைத்துச் சிறு பிள்ளைகளை அவர்களது விருப்பப்படி அவற்றில் ஏறி உட்கார்ந்து விளையாட விட்டுவிட்டார்கள். அப்பொழுது பிள்ளைகளுக்கு எவ்வளவு சந்தோஷமாயிருந்தது! அதனால் அவர்களுக்கேற்பட்ட அப்பியாசத்தை யென்னென்றுரைப்பது! சிறு குழந்தைகள் கைகளையும் கால்களையும் உபயோகித்து மிருகங்களைப்போல இந்தப் படிக்கட்டுகளில் ஏறினார்கள். அப்புறம், வரவரப் பெரியவர்கள் ஏறுவதைப்போல ஏறப் பழகிவிட்டார்கள். அவர்கள் ஜன்னற்படிக்கட்டுகளின் மேல் ஏறி நின்றுகொண்டு கீழே குதித்தார்கள்.

விளையாட்டுச் சத்தம் படிப்பல்ல என்று நாம் நினைக்கலாம். ஆனால் பிள்ளைகள் விளையாட்டின் மூலமாகவே தமக்குள் இருக்கிற இயற்கையான அசைவையும் அறிவையும் தக்கவாறு உபயோகிக்கப் பழகுகின்றனர்.

வர வர முன்னங்கைகளுக்கான இன்னும் பல வேலைகள் கொடுக்கலாம். பிள்ளைகள் சிறு கோப்பைகளில் தண்ணீர் தூக்கிக்கொண்டுவரப் படிக்கிறார்கள். யார் ஒரு துளிகூடச் சிந்தாமல் ஒரு கிண்ணம் நிறையத் தண்ணீர் கொண்டுவரக் கூடும் என்று தூண்டுவதானால், அதன் மூலமாய்ச் சிறுவர்களுக்கு நாம் நல்ல கைப்பழக்கத்தை உண்டுபண்ணக் கூடும். இதற்கு அடுத்தபடியாகப் பிள்ளைகள் சாக்கு, வர்ணப் பென்சல், கத்தரிக்கோல், சாயம்போடும் பிரஷ் முதலானவற்றைச் சரியாய் உபயோகிக்க பழகுதலேயாம். இவற்றைக் கையாளப் பழகும் பிள்ளைகளின் இயற்கையான குணம் சரியாய்ப் புலப்பட நாம் இடம் கொடுக்கிறோம். பிள்ளை தன் உடம்பின் பல பாகங்களையும் சாமர்த்தியமாய் கூச்சமின்றி அசைத்து ஆட்டித் தன் இஷ்டப்படி செய்யப் பழகியிருக்கின்றது. முதல் வகுப்பிற்குத் தேவையான சில சாமான்களும் அவற்றின் பிரயோஜனங்களும் இங்கே சுருக்கமாய்க் காட்டப்படும்.

---

## கீழ் வகுப்புக்களில் வேண்டிய சாமான்கள்.

| சாமான்கள். | தேக அப்பியாசம். | மன அப்பியாசம். | கூட்டமாய்ச் சேருதல். |
|---|---|---|---|
| 1. ஊஞ்சல். | அதிகம். | ஐம்புலன்களின் வளர்ச்சி, ஆட்டம், மனோபாவனு சக்தி. | முறை முறையாக விளையாடுதல்; பெரிய பிள்ளைகள் சிறுவர்களுக்கு உதவி செய்தல். |
| 2. மண்வெட்டி. | கொஞ்சம். | ஐ. மனோபாவனு சக்தி, கை பழக்கம், பாவைஷ. | ஒருவரோடு ஒருவர் சேர்ந்து செய்தல். |
| 3. தோட்டம். | அதிகம். | ஐ. கை பழக்கம், பாவைஷ, கஷ்டங்களை நீக்க யோசித்தல், அழகைக் கவனித்தல். | நாடோறும் கடமை செய்தல்; மற்றவர்களின் வேலையை மெச்சிக்கொள்வது. |
| 4. கட்டைகள். | கொஞ்சம். | கை பழக்கம், சிருஷ்டித்தல், பாவைஷ, அழகு. | சேர்ந்து செய்யக்கூடிய காரியங்களை யோசித்தல். |
| 5. களிமண். | கொஞ்சம். | கை பழக்கம், சிருஷ்டித்தல், மனோபாவனு சக்தி, அழகு. | அலங்காரம். பிரயோஜனம். மற்றவர்களுக்காக ஒழுங்கு பண்ணுவது. |

## கீழ் வகுப்புகளில் வேண்டிய சாமான்கள் (தொடர்ச்சி).

| சாமான்கள். | தேக அப்பியாசம். | மன அப்பியாசம். | கூட்டமாய்ச் சேருதல். |
|---|---|---|---|
| 6. தச்சுவேலை. | அதிகம். | கை பழக்கம், சிருஷ்டித்தல், அழகு, கஷ்டங்களை நீக்குவது. | ஒருவருக்கு ஒருவர் உதவி செய்தல், வேலையை மெச்சிக்கொள்வது. |
| 7. வர்ண மணிகள். | கொஞ்சம். | ஐ. ஒழுங்கு, அழகு. | சுய இஷ்டப்படி செய்தல், ஒப்பிட்டுப் பார்த்தல், சாமர்த்தியம். |
| 8. துணியும் நூலும். | கொஞ்சம். | சாமர்த்தியம், சிருஷ்டித்தல், அழகு, பாவை, கஷ்டங்களை நீக்குவது. | பிரயோஜனம், அலங்காரம், சுய இஷ்டம். |
| 9. வர்ணக்காகிதம். | ,, | சாமர்த்தியம், சிருஷ்டித்தல். அழகு, பாவை, கஷ்டங்களை நீக்குவது. | வரைதலுக்கு அஸ்திபாரமான படிப்பு. |
| 10. வர்ணப்பென்சல். | ,, | ,, ,, | ,, ,, |
| 11. கத்தரிக்கோல். | ,, | ,, ,, | ,, ,, |
| 12. சாயப்பெட்டிகள். | ,, | ,, ,, | ,, ,, |

## 2. சப்தம் செய்தல்.

யாராவது கற்றுக்கொடுப்பதற்குமுன் ஒவ்வொரு சிறு குழந்தையும் வெவ்வேறு விதமான சத்தங்களைத் தானுகவே புறப்படுவிக்கும். இந்த இயற்கையான குணத்தினுல் பாஷை உண்டாகின்றது.

குழந்தை பிறந்ததுமுதல் இரண்டு வாரங்கள் மட்டும் ஒரே சத்தத்தோடு அழுகிறது; ஆனுல் ஐந்து வாரங்களுக்குள் பல வித்தியாசமான சத்தங்கள் புறப்படுவிக்கும். அது தன் பசி, வேதனை, கோபம், சந்தோஷம் முதலான உணர்ச்சிகளை எல்லாம் பல வித்தியாசமான சத்தங்களினுல் பெரியவர்களுக்கு விளக்குகின்றது. எந்த தேசத்துக் குழந்தைகளாயிருந்தாலும் அவர்களெல்லோரும் இந்தப் பருவத்தில் வழங்கும் பாஷை ஒன்றேயாம்—என்று சொல்லலாம்; ஆனுல், அதன்பிறகு ஏற்படுகிற பிள்ளையின் பாஷை பெரியவர்களாலேயே உண்டாகின்றது. பிள்ளைகள் தமது விருப்பம் எந்த சத்தங்களினுல் நிறைவேறுகிறதோ அந்தந்த சத்தங்களையே திரும்பத்திரும்ப உபயோகித்து அவற்றையே தம் பாஷையாக நினைத்துக்கொள்ளுவார்கள். எந்தப் பேச்சினுல் பெரியவர்கள் சந்தோஷப்படுகிருர்கள் என்று சிறு பிள்ளைகள் வெகு சீக்கிரமாய்க் கவனித்து அதே மாதிரியாய்ப்பேச முழுமனதோடு பிரயாசப்படுகிருர்கள். ஒரு வீட்டிலிருந்த ஒரு பிள்ளை ஐந்து வயதாகியும் நன்ருய்ப் பேசத் தெரியாமல் இருந்தது. அவளுடைய அக்காள் எப்பொழுதும் அப்பிள்ளைக்காகப் பேசிவந்தாள். ஆனுல் அக்காள் பள்ளிக்கூடத்திற்குப் போகத் தொடங்கினபோது அச்சிறு பிள்ளை தன் எண்ணங்களை வெளியிட நாள்முழுவதும் பேசிக்கொண்டேயிருந்தது.

உபாத்தியாயர்கள் இந்தக் குணத்தினுலேதான் பாஷையைக் கற்றுக்கொடுக்கும் விஷயத்தில் பல முறைகளை

ஆராய்ந்து பிள்ளைகள் சரியாய்ப் பேசவும் வாசிக்கவும் சுற்றுக் கொள்ள பற்பல விதமாய்ப் பிரயாசப்படுகிறார்கள். அந்த முறைகளையெல்லாம் இப்புஸ்தகத்தில் விஸ்தரிக்க முடியா தென்றாலும், யாவரும் கவனிக்கவேண்டிய சில விஷயங்களை மட்டும் காட்டுதல் கூடும்.

அவையாவன:—

1. பெரியவர்கள் பேசும்பொழுது அவர்கள் எந்த எந்த வார்த்தைகளோடு சைகையும் காட்டுகிறார்கள் என்று பிள்ளைகள் கவனித்து அவற்றைச் சிந்திப்பார்கள்.

2. ஒருவர் தங்களுக்கு வேண்டியதைச் செய்யும்படியாகத் தாம் எந்த வார்த்தைகளைச் சேர்த்து உபயோகிக்கவேண்டும் என்று பிள்ளைகள் யோசிக்கிறார்கள்.

3. பிள்ளைகள் தினந்தோறும் தம் காதிற் படுகிறபடியே பாஷையின் ஒழுங்குகளைக் கற்றுக்கொண்டு உபயோகிக்கிறார்கள்.

நான்கு வயது சென்ற சில பிள்ளைகள் 1500 வார்த்தைகளைச் சரியாய் உபயோகிக்க முடியும். ஆனால் சில பிள்ளைகள் பெரியவர்களுடைய குறைவான சொற்பிரயோகத்தினாலே 300 அல்லது 400 வார்த்தைகள் மட்டும் உபயோகிக்கிறார்கள். அவர்களுக்குச் சுத்தப் பேச்சின் பழக்க வழக்கங்களைப்பற்றி ஒன்றுமே தெரியவில்லை. வீட்டிலுள்ள பெரியவர்கள் மூன்று விஷயங்களைக் கவனிப்பதினால் உபாத்தியாயர்களுக்குப் பெரிதும் உதவிபுரிவார்கள்.

(1) பிள்ளைகள் பேசும் மழலைச் சொற்களை உபயோகித்து நாம் அவர்களிடம் பேசுவது நன்றன்று. அப்படிச் செய்வதினால் பிள்ளைகள், அந்த மழலைச் சொற்களே சரியான பேச்சு என்று நினைத்துத் தங்கள் தப்பிதங்களைத் தாமாகவே திருத்திக்கொள்ளப் பிரயாசப்படமாட்டார்கள்.

(2) வீட்டிலுள்ள பெரியவர்கள் தம் சொந்த பாஷையின் அழகைத் தம்முடைய பிள்ளைகளுக்குக் காண்பிக்க வேண்டுமானால், குழந்தைப் பருவத்திலிருந்தே அவர்களிடம் பேசும்பொழுதாவது, அவரது முன்னிலையில் பேசும்பொழுதாவது, சுத்தமான வார்த்தைகளைச் சரியானபடி உபயோகிக்கவேண்டும்.

(3) பிள்ளைகள் வாசிப்பதற்கும் எழுதுவதற்கும் முன் நன்றாய்ப் பேசுவது அவசியம்.

### 3. கைப்பழக்கம்.

பிள்ளைகள் எல்லோரும் ஒவ்வொரு பொருளையும் எடுத்துப்பிடித்துத் தட்டி, இழுத்துக் கிழித்து, எறிந்து, அமுக்கி, உயர்த்திப் பலவாறு கையாடி விளையாடுவார்கள். இக்குணத்தினாலேதான் கைத்தேர்ச்சி உண்டாகின்றது. பலர் முதிர்வயதடைந்தபின்னர் ஒரு புது வேலையிற் பழக முயன்று, சாத்தியமாகாதபோது, 'ஐயோ! நாம் சிறு வயதிற் பழகினோமில்லையே; அதனாலன்றோ இந்த வயதில் முடியாமற்போயிற்று' என்று சொல்லுவதுண்டு. பிள்ளை எதையாவது கையினால் தொட்டுக்குறும்பு பண்ணுகின்றது என்று தாய் ஓடிவந்து பிள்ளை கையில் இருக்கிற சாமானைப் பிடுங்கி அவ்விரு சிறு கைகளையும் வெறுமையாக்கிவிட்டுப் போகிறாள். அப்பொழுது என்ன ஏற்படுகின்றது என்று பாருங்கள். பிள்ளைக்கு பின்வரும் காரியங்கள் இரண்டில் ஏதேனுமொன்று நடைபெறும். எதைக் கண்டாலும் அதைக் கையாடவேண்டும் என்ற இவ்வியற்கைக் குணத்தினால் ஒருவேளை பிள்ளை வேறேதாவது ஒரு சாமானைத் தேடி எடுத்து அதைக் கோபத்தோடு கீழே எறிந்து நிச்சயமாய் மோசம் செய்யப்பார்க்கும். இல்லாவிட்டால் பிள்ளை சும்மா இருந்துவிடும். அதனால், தன் கைகளின் ஆசையைத்

திருப்திபண்ண ஒன்றும் இல்லாததினாலே அதற்கு வரவரக் கைப்பழக்கம் ஒன்றும் ஏற்படாமலே போய்விடும்.

ஆகையால், இந்நாள் பள்ளிக்கூடங்களில் நாம் பல நூதனமான காட்சிகள் காண்கிறோம். பிள்ளைகள் எல்லோரும் வரிசை வரிசையாக உட்கார்ந்து ஒரே மாதிரியான வேலை செய்துகொண்டிருக்கமாட்டார்கள். உபாத்தியாயர் பிள்ளைகளுக்கு வகுப்பறையிலுள்ள பற்பல சாமான்களைக் காண்பித்து அவர்கள் ஒவ்வொருவரும் தத்தமக்கு இஷ்டமான வேலையைச் செய்ய விட்டுவிடுகிறார். முதலில் அங்கு நடைபெறும் வேலைகள் அவ்வளவு ஒழுங்காய் இரா. சில சிறுவர்கள் வேலையில் ஊக்கம்கொள்ளாமல் அங்குமிங்கும் சுற்றித் திரிந்துகொண்டிருப்பார்கள். ஆனால், அவர்கள் படிப்படியாகத் தத்தம் சக்திக்கேற்ற வேலைகளைத் தெரிந்து கொண்டு அவற்றை முழுமனதோடு செய்ய முயலுவார்கள். அப்பொழுது, அவர்களுக்குக் கைவேலைத் திறமையும், கவனிக்கும் சக்தியும், தம் விருப்பப்படி தமக்குத் தேவையானதைத் தெரிந்துகொள்ளும் திட்பமும், எடுத்த வேலையைத் தொடுத்து முடிக்குமாற்றலும் எல்லாம் உறுதிப்படுகின்றன. இப்படிப்பட்ட வகுப்புக்களை நடத்த நான்கு முக்கியக் குறிப்புகள் உள.

1. பிள்ளைகள் முதலில் பெரிய சாமான்களை வைத்துக் கொண்டு இலேசாய் விளையாடுவார்கள். நாம் பிள்ளைகள் கையாடுவதற்காகப் பெரிய கட்டைகளையும் இலேசாய்ப் பிடிக்கக்கூடிய ஆயுதங்களையும் சேகரித்து வைக்கவேண்டும்.

2. மணல், களிமண், கட்டைகள், பெரிய நாடா, நார் முதலியன கொண்டு செய்யும் வேலைகளை முதலிற் கொடுக்க வேண்டும். பின்பு, கத்திரிக்கோல், ப்ரஷ், வர்ணப் பென்சில்கள், சாதாரணப் பென்சில்கள் தையல்வேலைக்கான சாமான்கள் முதலியன கொடுக்கவேண்டும்.

3. பிள்ளைகள் முதலாவது ஏதோ ஒன்றைச் செய்ய வேண்டுமென்று நினைக்கின்றனர்; பின்பு அதை எப்படிச் செய்யவேண்டும் என்று யோசிப்பதில்லை. ஆகையால், அதற்கு முதலில் கைப்பழக்கம் ஏற்படவேண்டும். பின்பு கவனிக்கும் திறமை வளர ஆரம்பிக்கும். பிள்ளைகளின் மனதில் மூன்று நோக்கங்கள் இருக்க முடியும்.

(1) தன்னுள் எழுந்த ஓர் யோசனையை வெளிப்படுத்தல்.

(2) ஏதாவது ஒரு பொருளைச் செய்துகாட்டல்.

(3) ஏதாவதொன்றை அழகாய்ச் செய்தல்.

ஆனால், நாம், பிள்ளைகளிடம் முதலிலேயே வேலையில் பரிபூரணத்தன்மையை எதிர்பார்க்க முடியாது. நாம் பிள்ளைகளின் நோக்கங்களை அவர்களுக்குப் படிப்படியாகக் கற்பிக்கவேண்டும்.

ஒவ்வொரு பிள்ளையினிடத்தும் படைக்குந்திறமை உண்டென்பதை நாம் நம்பவேண்டும்; ஒரு பிள்ளை ஒரு வேலையில் சிறிது தேர்ச்சி பெற்றவுடனே, தன் சொந்த யோசனைகளை அந்த வேலையில் வெளிப்படுத்த விட்டுவிடுதல் நலமாம். சில பிள்ளைகளுக்குக் கைவேலையில் அதிகப் பழக்கமில்லாவிட்டாலும், பாஷைக்குரிய பாடங்களில் சற்றே அதிக நாட்டமிருக்கலாம்.

## 4. உடைமைப்பேறும் குணம்

யாவருக்கும் எந்த வயதிலும் சாப்பாட்டு விஷயமாக மிக்க சிந்தனையும் கவலையும் இருக்கும். ஆனால், இத்தன்மை சிறு பிள்ளைகளிடத்தில் விசேஷித்த விதமாய்க் காணப்படுகின்றது. குழந்தை முதலில் தாய்ப்பாலருந்துகின்றது. பின்பு அது தன் கையில் அகப்படும் எப்பொருளையும் வாயில் ருசிபார்க்கப் போட்டுக்கொள்ளும். நாளடைவில்

பிள்ளைகளுக்குச் சாப்பாட்டு விஷயமாக ஏதோ ஒரு வழக்கம் ஏற்பட்டுவிடுகின்றது. அவர்களுக்குச் சாப்பாட்டைக் குறித்து அதிக யோசனையும் கவனிப்பும் ஆசையும் உண்டு. ஆறு வயதானதும் இப்பெரிய ஆசை குறைந்துபோம்; ஏனென்றால், அப்பொழுது அநுபவத்தினால் அறிவு ஏற்படு கின்றது. தானே தன் இஷ்டப்படி சாப்பிடலாம் என்று பிள்ளைக்குத் தெரிந்தவுடன், எதைக் கண்டாலும் வாயில் போட்டுக்கொள்ளும் வழக்கத்தை விட்டுவிடுகின்றது. தனக்குப் பிரியமானதைமட்டும் அதிகமாய் விரும்பிக் கேட்கும். தாய்மார்கள் இவ்வயதிலேதான் பெரிதும் கவலையோடு நல்ல பழக்க வழக்கங்களைப் பிள்ளைகளுக்குக் கற்பிக்க முயலவேண்டும். இயற்கையான இவ்வல்லமையால், பிள்ளை தன் ஆசையை அடக்கியாளக் கற்றுக்கொள்ளுமாயின், அதன் பின்பு அதற்குத் தன் ஆத்தும விஷயங்களிலும் சித்தத்தை யடக்கியாளும் திறமை யேற்படும். உணவைப் பெறும் குணமே, முன்னாட்களில் தங்களுக்கு வேண்டிய மிருகங்களை வேட்டையாடிக் கொல்ல மனிதர்களை ஏவியது. இந்நாட்களில் மனிதர்கள் வேட்டையாடி வயிறு வளர்க்கத் தேவையில்லை. என்றாலும் அந்தத் தன்மை பிள்ளைகளின் செய்கைகளிற் காணப்படும். ஒரு பிள்ளை ஒரு சிறு பூச்சி ஓடிப்போவதைப் பார்த்தவுடனே அதைப் பிடித்துத் துண்டு துண்டாகச் சிதைத்துவிடுகின்றது. ஒரு சிறு பூனைக்குட்டியோ நாய்க்குட்டியோ ஓடக்கண்டால், பிள்ளை அதின்மேல் விழுந்து பிடித்து அதன் கழுத்தை நெரித்து மூச்சுமுட்டச் செய்யும். அதைக் கண்டு நாம், 'அந்தோ! என்ன கொடுமை?' என்று சொல்லுவோம். ஆனால் பெரியவர்களுங்கூட ஏதேனும் ஒரு சண்டையில் மிருகங்களைப்போல மற்றவர்களுக்கு வேதனை யுண்டுபண்ண முயலுகின்றனர். இச்சுறுசுறுப்பு ஓர் இயல்பான குணமாகும். உபாத்தியாயர் இக்குணத்துக்குத் தக்க வழியொன்று காட்டவேண்டும்.

பிள்ளைகள் பறவைகளை வேட்டையாடி அவற்றைக் கொல்லாமல், அப்பறவைகளின் கூடுகளையும், முட்டைகளையும் சேகரித்து அவற்றைப் பார்த்து அநேக விஷயங்களைப் படிக்கலாம். வண்ணாத்திப்பூச்சிகளைப் பிடித்துச் சித்திரவதை செய்யாமல் சரியான முறையில் அவற்றை வைத்துக்கொண்டு கவனிப்பது பெரிதும் பிரயோஜனமாயிருக்கும்.

## 5. சண்டைசெய்தல். போராட்டம்.

வேட்டையாடவேண்டும் என்ற ஆசையோடும் பொருள்களைக் கையாடுதல் என்ற குணத்தோடும் சண்டைசெய்தல் என்ற தன்மையும் சம்பந்தப்பட்டிருக்கின்றது. முதலாவது, ஒரு பிள்ளை இன்னொரு பிள்ளையைக் கீழே தள்ளித் தன் பெலத்தைப் பரீக்ஷித்துப் பார்க்கிறபொழுது அதை ஒரு சண்டை என்று நினைப்பதில்லை. கீழே தள்ளப்பட்ட பிள்ளை தனக்கு ஒன்றும் திரும்பச் செய்யாமலிருந்தால் முதல் பிள்ளை இரண்டாவது பிள்ளையை இன்னும் அதிகக் கொடுமையாக நடத்தும். இவ்வாறு, மற்றவர்களுக்குத் தொந்தரவு செய்யவேண்டும் என்ற ஆசையுள்ள பிள்ளைகள் சிறு பிள்ளைகளுக்கு அதிகத் தீமை செய்வார்கள். சிறுவர்கள் பெரியவர்களைக்கூட எவ்வளவோ தொந்தரவு செய்கிறார்கள் அல்லவா? போர்ராட்டம் என்னும் இந்தக் குணத்தினால் ஒரு தேசத்தின் ஜீவியத்தில் என்ன என்ன தீமைகள் விளைகின்றன. பலசாலிகள் பலவீனரைக் கொடுமையாய் நடத்துகின்றனர். அதிகாரிகள் தங்கள் வல்லமையைக் காட்டவேண்டும் என்ற நோக்கத்துடனேயே பல ஏழைகளைத் துன்பப்படுத்துகிறார்கள். மத விஷயங்களிலும் கூட இந்தக் குணம் வெளிப்படக் காணலாம். மார்க்கத்தினால் உண்டாகும் தற்பெருமை எத்தனையோ தீமைகளை விளைவிக்கக்கூடும்.

ஒரு பிள்ளை தான் மட்டும் சந்தோஷமடையவேண்டுமென்று சண்டைசெய்தல் நல்ல குணம் அன்று. என்றாலும்

ஒரு பிள்ளை தனக்கும் தன்னோடிருக்கிறவர்களுக்கும் நியாயமானபடி சண்டை செய்தால் நாம் அந்தப் பிள்ளையை மெச்சுகின்றோம். அப்படிப்பட்ட குணம் எல்லோரிடத்திலும் காணப்படவேண்டும். எது அநியாயம் என்று ஆராய்ந்து நீதி நியாயத்தை நிலைநிறுத்த நாம் எல்லோரும் சண்டை செய்து கொண்டே இருக்கவேண்டும். அநேக வாலிபர்களுக்குச் சண்டை செய்யவே தெரியவில்லை.

பிள்ளைகள் சண்டை செய்தால் பெரியவர்கள் எப்படி நடந்துகொள்ளவேண்டும்? ஒரு சிறு பையன் வந்து தன் அக்காள் தலைமயிரைப் பிடித்து இழுக்கிறான். அக்காள் சிரித்தால் அது விளையாட்டாகிவிடும். அப்படிச்செய்யாமல் அவள் தன் தம்பியை அடித்தால் அவன் உடனே அவளை மேலும் தொந்தரவு பண்ண பிரயாசப்படுவான். அப்பொழுது அக்காள் மூன்று விதமாய் நடந்துகொள்ளலாம். முதலாவது பதிலுக்குப் பதில் என்று கூறித் தன் தம்பியைத் திரும்பத் தொந்தரவு செய்யலாம். அப்படிச் செய்தால் கோபம் அதிகமாய் மூளுகிறது. இரண்டாவது, பிள்ளைகள் கோபமின்றி, விளையாட்டாக, சிரிப்பு உண்டு பண்ணவேண்டும் என்ற நோக்கத்தோடு ஏதாவது ஒன்றை செய்யக்கூடுமானால் அது ஒருவிதமான நல்ல சம்பந்தத்தை யுண்டுபண்ணுகின்றது. மூன்றாவதாக இரண்டு கட்சியிலிருக்கிறவர்கள் கை கலந்து போராடாமல் மனத்திற்குள் போராடலாம். ஒரு சிறுவன் ஒரு உபாத்தினி அம்மாளிடம் ஓடிவந்து, "அம்மா பிள்ளைகள் எல்லோரும் என்னை மொட்டைத்தலையா, மொட்டைத்தலையா" என்று கூப்பிட்டுக் கேலிபண்ணுகிறார்கள்" என்று சொன்னான். அதைக் கேட்ட அந்த அம்மாள் கோபங் கொள்ளாமல் சிரித்த முகத்துடனே "தம்பி, நாமும் அவர்களுக்கு ஒரு பேர் கொடுப்போம். அவர்களுக்கு என்ன பேர் கொடுக்கலாம். அவர்கள் ஒரு மோட்டார் வண்டியைப்போல் அதிகமாய்க்

கத்துகிறார்கள். ஆகையால், அவர்களை 'மோட்டார் வாயா, மோட்டார் வாயா,' என்று கூப்பிட்டுப் பார்'' என்றார்கள். சின்னப்பையன் அப்படியே அவர்களை அழைத்துக் கேலி பண்ணினான். அப்பொழுது அவர்கள் எல்லோரும் நகைத்தார்கள். முதலில் அவர்கள் கொண்ட சிறிது கோபம்கூட ஒரு நிமிஷத்தில் மாறிவிட்டது. சில சமயங்களில் பிள்ளைகள் தொந்தரவு செய்துகொண்டிருந்தால் நாம் அவர்களைக் கவனிக்காதவர்கள்போல இருந்துவிடவேண்டும். அப்படிச் செய்தால் தொந்தரவு செய்கிற பிள்ளைகளுக்கு அந்த ஆசை வரவரக் குறைந்துபோகிறது.

கலகம் செய்யும் பிள்ளைகளை நாம் எப்படிச் சமாதானம் செய்யலாம். பெரியவர்கள் கோபம் கொண்டு கலகம் செய்யும் பிள்ளைகளை விலக்கிக் கண்டிக்கிறார்கள். இவ்வழியாகச் சண்டையை விலக்கலாம். ஆனால் அவர்கள் இருகட்சியாரிடத்தும் ஏற்பட்ட மனக்கசப்பை மாற்றவில்லை. அப்பொழுது அவர்களுடைய மனம் சிந்தனை கொள்ள அவர்களுக்கு ஏதாவது கஷ்டமான வேலையொன்றைச் செய்யச் சொல்லலாம். அல்லது, ஒரு மிருகத்தைப் பாதுகாக்கும் பொறுப்பையாவது, ஒரு சிறு பிள்ளையைக் காப்பாற்றும் கடமையையாவது கொடுத்தால், பெரிய பிள்ளைகளின் மனதில், இன்னும் மேலான நோக்கங்கள் எழும். அநுபவமிகுந்த ஒரு உபாத்தியாயர் முரடனான சிறுவன் ஒருவன் தன் வகுப்பிற்கு வந்திருப்பதைக் கவனித்து அவனை அழைத்து, "சுந்தரம்! இந்தச் சிறு பையனைப் பார்த்தாயா? அவன் மிகவும் பலவீனமாயிருக்கிறான். மற்றப் பிள்ளைகள் எல்லோரும் அவனைக் கேலி பண்ணுகிறார்கள். இனிமேல் நீதான் அவனை மற்றவர்களிடமிருந்து காப்பாற்றவேண்டும்'' என்று சொன்னார். அச்சிறு பையனைத் தனக்குச் சிநேகிதனாகக்கொண்ட முரட்டுச் சிறுவன் அதுமுதல் தன்னுடைய நன்மைக்கென்று

சண்டை செய்யாமல், தன் சிறு தோழனைக் காப்பாற்றுவதற்காகவே போராடி வந்தான். அன்றியும், தன் சிறு தோழனுடைய கல்வித்தேர்ச்சியை அறிந்து அதிசயித்துத் தன் அறியாமையை நினைத்து வெட்கப்பட்டுக் கல்வி பயில்வதில் ஊக்கம்கொண்டு பெரிதும் முயன்று வந்தான். உபாத்தியாயர் கட்டாயத்தினால் செய்யமுடியாத காரியங்கள் சிறுவருடைய பலவீனத்தினால் செய்யப்படும்.

### 6. தனக்குச் சொந்தமான பொருள் வேண்டுமென்ற ஆசை (பொருள் சேகரித்து வைத்தல்)

பிள்ளை தனக்குப் பிரியமான ஏதோ ஒரு பொருளைக் கண்டால் அதை யெடுத்துக்கொண்டுபோய்த் தனக்கு வேண்டுமென்று பத்திரம் பண்ணிவைக்கும். இப்படியே ஒவ்வொன்றாகப் பல பொருளைச் சேகரித்து வைப்பதோடு, அவற்றை அடிக்கடி எண்ணி எல்லாம் சரியாயிருக்கின்றனவா என்று பார்க்கும். எண்ணத்தெரியாவிட்டால் திரும்பத் திரும்ப ஒவ்வொரு பொருளையும் தடவிப் பார்க்கும். பிள்ளை தான் சேகரித்த பொருளை மற்றவர்களுக்குத் தெரியாதபடி அங்கும் இங்கும் கொண்டுபோய் எங்கேயாவது ஒளித்துவைத்து மிகவும் சந்தோஷப்படும். பிள்ளையின் இந்த நோக்கம் கெட்டதென்று நினைக்கவேண்டாம். தனக்கே சொந்தமான சில பொருள்கள் வேண்டுமென்ற ஆசையே இதற்குக் காரணமாகும். இப்படிப்பட்ட ஆசை யாவருக்கும் உண்டு. பெரியவர்களுங்கூட எவ்வளவோ பெருமையோடு, 'இது என் வீடு; இது என் பிள்ளை, இது என் மாடு' என்று சொல்லிச் சொந்தம் பாராட்டுகிறார்கள். அப்படியிருந்தும் அவர்கள் தங்களைப்போலவே சிறு பிள்ளைகளும் அதே ஆசையுடையவர்களா யிருப்பார்கள் என்பதை மறந்துபோகிறார்கள்.

இதைத் தன்னயம் என்று நினைக்கக்கூடாது. நாம் நமது சொந்தப் பொருள்களைப் பத்திரம் பண்ணுவதற்குத் தெரிந்துகொண்டபிறகுதான் மற்றவர் பொருளைப் பத்திரமாய்க் கவனிக்கக் கவலைப்படுகிறோம். பிள்ளைகள் தம்முடையதென்று சொந்தம் பாராட்டிச் சேகரித்து வைத்திருக்கும் சாமான்களைக்குறித்து உபாத்தியாயர்கள் மிகவும் கவலையுடையவர்களா யிருக்கவேண்டும். பெற்றோர்கள் தம் பிள்ளைகளுக்கு ஒரு தனியிடம் கொடுத்து அந்த இடத்தில் அவர்களுடைய சொந்தச்சாமான்களைப் பத்திரம்பண்ணிக் கொள்ள விட்டுவிடவேண்டும். அப்படிச் செய்தால் பிள்ளைகள் பெரியவர்களுடைய சாமான்களை அவ்வளவாயெடுக்க மாட்டார்கள். பெரியவர்கள், பிள்ளைகளிடத்தில் காணப்படும் இந்தக் குணத்தைச் சரியான வழிகளிற் திருப்பாததினாலே, மற்றவர்களுடைய சாமான்களைத் திருடப் பிள்ளைகளைக் கட்டாயப்படுத்துகிறார்கள்.

ஒரு வகுப்பில் மூன்று பையன்கள் மரவேலைசெய்து அழகான சிறு வண்டிகள் உண்டுபண்ணினார்கள். அந்த மூன்று வண்டிகளும் வகுப்பறையின் ஒரு மூலையில் இருந்தன. அவற்றைக் கண்ட மற்றப் பிள்ளைகள் தங்கள் உபாத்தினியம்மாளிடம் அடிக்கடிப் போய் அவற்றில் ஒன்றையெடுத்து விளையாட உத்தரவு கேட்டார்கள். அவர்கள் வந்து கேட்டபோதெல்லாம் அந்த உபாத்தினியம்மாள், 'அந்த வண்டிகள் எனக்குச் சொந்தமல்ல. நீங்கள் கேட்கிற வண்டிக்குச் சொந்தக்காரன் சிங்காரம். நீங்கள் அவனிடம்போய்க் கேளுங்கள்' என்று சொன்னாள்.

பொருள் சேகரிக்கவேண்டும் என்ற ஆசை யேற்படும் பொழுது பிள்ளை மற்றவர்களை வெகு ஊக்கமாய்க் கவனிக்கின்றது. மற்றப் பிள்ளைகளைப்பார்க்கிலும் தங்களுக்கே அதிகமாக வேண்டுமென்ற ஆசை மட்டும் முதலில் ஒவ்வொரு

பிள்ளைக்கும் உண்டாகின்றது. சிறு பிள்ளைகள், கற்கள், குச்சிகள், ஊசிகள், சாவிகள், வர்ணக் காகிதங்கள் முதலியன போன்ற பல பொருள்களை அவற்றின் மதிப்பைச் சிறிதுமே யறியாமல் சேகரித்து வைத்துக்கொள்வார்கள். அப்படிப் பல பொருள்களைச்சேகரிக்கும் தன்மையுள்ள பிள்ளைகளுக்கு, அவர்களுடைய கல்விக்கு ஏற்ற பொருள்களைச் சேர்த்துக் கொள்வது பிரயோஜனமாக விருக்குமென்று நாம் படிப்படி யாகக் காட்டலாம். ஒரு குடும்பத்தில் ஒரு தாயும் மகனும் பலவிதமான தபால் தலைகளைச் சேகரித்துக் கொள்வார்களா னல், அவர்கள் வெகுநேரமட்டும் ஒன்றுகூடியிருந்து அந்தத் தபால் தலைகளையெல்லாம் சுத்தம்செய்து சித்திரப் புத்தகத் தில் ஒட்டிப் பின் பல தேசங்களைப்பற்றிப் பல விஷயங்கள் தெரிந்துகொள்ளலாம். தகப்பனும் மகளும் வெளியேபோய் அழகான பூச்சிகளைச் சரியான முறையில் பிடித்துவைத்துக் கொண்டு அவற்றைக்குறித்துப் படிக்கலாம்; அல்லது அழ கிய பூக்களை ஏற்றபடி பறித்து அவற்றைக் கவனித்துப் பல விஷயங்கள் கற்றுக்கொள்ளலாம். ஒரு குடும்பத்தில் உள்ள பெரியவர்களும் சிறு பிள்ளைகளும் ஒன்றுகூடிப் பல விஷயங்களைக் கற்றுக்கொள்ளும்பொழுது, அவர்களுக்குள் நெருங்கிய சம்பந்தமும் விசேஷித்த ஐக்யமும் ஏற்படும்.

இப்பொழுது நாம் இரண்டாவது விதமான குணங்களைக் கவனித்துப் பார்க்கலாம். பிள்ளைகள் கூட்டம் கூட்டமாய் இருக்கும்பொழுதுதான் இந்தக் குணங்கள் வெளிப்படும்; ஏனென்றால் பிள்ளைகள் இரண்டு மூன்று பேராய்க் கூடி யிருக்கும்பொழுதுதான் அவர்களுக்கு இந்தக் குணங்கள் தேவையாயிருக்கும். இவை என்னென்ன குணங்கள் என்று தெரிந்துகொள்வோம்.

1. பெற்றோர் காட்டும் கவலை.
2. கூட்டமாய்க் கூடியிருக்கவேண்டுமென்ற ஆசை.

3. மற்றவர்கள் தங்களைப் புகழவேண்டுமென்று விரும்புதல்.
4. மற்றவர்களை முந்திக்கொள்ள விரும்புதல். போட்டி போடும் குணம்.
5. மற்றவர்கள் செய்வதுபோல் செய்தல்.
6. ஆண் பெண் தன்மை.

### 1. பெற்றோர் காட்டும் கவலை.

மிகவும் முரட்டுத்தன்மை யுடையவர்களாகக் காணப்படும் மனிதர்களிடத்திலும்கூட திடீரென்று ஓர் அருமையான குணம் வெளிப்படுகின்றது. அவர்கள் ஏதாவது ஓர் சிறு பொருளுக்காகவோ ஒரு சிறு பிள்ளைக்காகவோ ஒரு மிருகத்துக்காகவோ பெற்றோரைப்போலவே அதிகக் கவலை கொண்டு ஆச்சரியமான தைரியத்தையும் அன்பையும் காட்டுகிறார்கள். பிள்ளைகள் சிறு வயதாயிருக்கும்போதுகூட அவர்களிடத்தில் இந்தக் குணம் காணப்படுகின்றது. சிலர், இக்குணம் ஆண் பிள்ளைகளிடத்தில் காணப்படுவதைப் பார்க்கிலும் பெண் பிள்ளைகளிடத்தில் அதிகமாகத் தோன்றுகிறது என்று சொல்லுவார்கள். ஆனால் ஆண் பிள்ளைகளுக்கும் இக்குணத்தை வெளிப்படுத்த நாம் இடங்கொடுத்தால் அவர்களிடத்திலும் இது அதிகமாய்த் தோன்றும். உதாரணமாக, பையன்கள் பொம்மைகளை வைத்து விளையாடும்பொழுது அதைக் கண்டு நகைத்து அவர்களைத் தடுக்காமல் இருந்தால், அவர்களுக்கு அது ஒரு இயல்பான விளையாட்டாகத் தோன்றுவதோடு இந்தக் குணமும் வளர்ந்து வரும். குழந்தைகளிடத்தில் காணப்படும் இக்குணத்தை இரண்டுவிதமாய் உபயோகித்துப் பயன் அடையச் செய்யலாம். முதலாவது, பிள்ளைகள் தங்கள் சாமான்களையும், எல்லா மிருகங்களையும், தங்களைப்போன்ற மற்றச் சிறு பிள்ளைகளை

யும், வர வர அதிக பட்சமாய் நேசித்து பாதுகாக்கப் பழக்க லாம். இரண்டாவதாக மற்றவர்களுடைய கவலைகள் எப் படிப்பட்டவை என்று பிள்ளைகளை வெகு சீக்கிரம் உணரச் செய்யலாம்.

## 2. கூட்டமாய்க் கூடியிருக்கவேண்டுமென்ற ஆசை.

இக்குணம் மிருகங்களிடத்திலும் மனிதர்களிடத்தி லும் காணப்படுகின்றது. நாம் சிறு குழந்தையைத் தனி மையாய் ஓரிடத்தில் விட்டுவிட்டால் அது அழுகிறது. மூன்று வயதுப் பிள்ளைகள் தங்களைப்போன்ற சமவயதுப் பிள்ளைகளோடு விளையாட ஆசைப்படுகிறார்கள். ஒன்று கூடியிருக்க வேண்டுமென்ற இந்த குணத்தினாலேதான் மனிதர்கள் தனிமையாய் இருந்து செய்ய முடியாத அநேக காரியங்களை பலர் ஒன்றுசேர்ந்து கூடுகிற ஒற்றுமை என் னும் வல்லமையினால் செய்து முடிக்கிறார்கள். வீட்டில் தனிமையாய் வாழ்ந்த ஒரு பிள்ளை பள்ளிக்கூடத்திற்கு வரு கிறபோது அது மற்றவர்களோடு ஒன்றுசேர்ந்து அநேக காரியங்களைச் செய்யவேண்டியிருப்பதினாலே பல நன்மை களை அடைகின்றது. உபாத்தியாயர்கள் தங்கள் வகுப்பு அறைகளில் பிள்ளைகளை அதிகமாக ஒன்றுகூடச்செய்து தங்களுடைய காரியங்களைத் தாங்களே கவனித்துக்கொள் ளும்படி அவர்களை விட்டுவிடலாம். நாம் எல்லோரும் இப்புதிய முறையின் பிரயோஜனத்தை இன்னும் நன்றாய் ஆராய்ந்து பார்க்கவேண்டும். உபாத்திமார் இக் குணத் தைக் கண்டிப்பினால் நீக்க பிரயாசப்பட்டால் தண்டனை விஷயமாகப் பல கஷ்டத்திற் குட்படுவார்கள். பிள்ளைகள் விளையாடுகிறதற்குத் தனித்தனி இடங்கள் கொடுக்கவேண் டும். வெவ்வேறு நோக்கத்தோடு சிறு சிறு கூட்டங்களாக அவர்களை ஒன்றுசேர்க்கவேண்டும். பிறகு அவர்களை அவர் களிஷ்டப்படி விளையாட விட்டுவிடவேண்டும். அப்பொ

முது அவர்கள் தங்களுடைய யோசனைகளையும் விருப்பங் களையும் தங்கள் விளையாட்டில் அதிகமாய் வெளிப்படுத்து வார்கள். இப்படிச் செய்வதாயிருந்தால் அவர்கள் உபாத்தி யாயருக்குத் தெரியாமல் தெருக்கூட்டங்களில் கலந்து தீமை செய்ய ஆசைப்படமாட்டார்கள்.

### 3. மற்றவர்கள் தங்களைப் புகழவேண்டுமென்று விரும்புதல்.

நாம் எல்லோரும் மற்றவர்கள் நம்மைப்பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று அறிய விரும்புகிறோம். மற்றவர்கள் நம்மைப் புகழவேண்டும் என்ற ஆசை இயற்கையானது. மற்றவர்கள் நம்மைக் கண்டு சந்தோஷமடைந்தால் நாம் உள்ளான திருப்தி அடைகிறோம். யாராவது ஒருவர் நம் மிடம் கோபித்துக்கொண்டாலும், கேலி பண்ணினாலும் நாம் அதை எவ்வளவாக உடனே மறைக்கப் பிரயாசப்பட்ட போதிலும் உள்ளூற விசனப்படுகிறோம். இதனோடு இன் னொரு ஆசையும் சம்பந்தப்பட்டிருக்கிறது. அதென்ன வென்றால், வேடிக்கையாகச் செய்யக்கூடிய காரியங்கள் ஏதாவது இருந்தால் அதை மற்றவர்களுக்கு முன்பு அடிக் கடி செய்து காட்டும் விருப்பமேயாம். சிறு பிள்ளைகள் தங்க ளுடைய செய்கை பெரியவர்களுக்குப் பிரியமாயிருக்கும் என்று நினைத்து அவர்கள் பார்க்கும்படித் தங்கள் திறமை யையும் சாமர்த்தியத்தையும் காட்டப் பிரயாசப்படுவார்கள். பெரியவர்கள் தங்களுடைய நோக்கம் என்னவென்று தெளி வாய் வெளிக்காட்டமாட்டார்கள். ஆனால் ஒருவருடைய தயவைச் சம்பாதித்துக்கொள்ளவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டால் அப்பொழுது தங்களுடைய நல்ல குணங்களை மட்டும் அதிகமாக வெளிக்காட்டப் பிரயாசப்படுவார்கள்.

இந்த ஆசையின் நோக்கம் நாளடைவில் மாறிப்போகின் றது. சிறு பிள்ளைகள் தங்களுக்குத் தெரிந்த ஏதோ ஒரு

புதிய வார்த்தையையாவது புதிய விளையாட்டையாவது புதிய நடக்கையையாவது மற்றவர்களுக்குக் காட்ட ஆசைப்படுகிறார்கள். பின்பு பிள்ளைகள் தாம் விளையாடும்பொழுது தம் தேக பலத்தை எல்லோருக்கும் காட்ட ஆசைகொள்ளுவார்கள். வகுப்பில் நடக்கும் பாடங்களில் அதிக மார்க்கு வாங்கவும் அவர்களுக்கு ஆசையுண்டு. பெரியவர்களில் சிலர், யாராவது ஒருவருடைய அன்பை விசேஷித்த விதமாய் அடைய முழுமனதோடு பிரயாசப்படுவார்கள். வேறு சிலர் எல்லோருக்கும் நல்லவர்களாய் நடந்துகொள்ளப் பிரயாசப்படுவார்கள். நம்முடைய பழக்கங்கள் நம்முடைய ஜீவியம் முழுவதையும் ஆளுகிறது.

ஒரு வகுப்பில் நமக்குப் பிரியமான சில பிள்ளைகள் ஒரு மாதிரித் தாவணிக் கட்டியிருந்தால் நமக்கும் அதுபோன்ற ஒரு தாவணி கட்டாயமாய் வேண்டும் என்று நினைக்கிறோம். ஒரு கூட்டத்திலுள்ள பல வாலிபர்கள் குறித்த மாதிரியான உடை தரித்துவருவார்கள் என்று நமக்குத் தெரிந்திருந்தால் நாம் அந்தக் கூட்டத்திற்குப் போகும்பொழுது அந்த மாதிரியான உடையைத் தவிர வேறேதாவது ஒரு உடையைத் தரிக்கப் பயப்படுகிறோம். மற்றவர்கள் நம்மைப் பார்த்துக் கேலிபண்ணினல் அது நம் உள்ளத்தைக் குத்துகிறது. மற்றவர்கள் நம்மைக் கண்டு புகழவேண்டுமென்று விரும்புகிற குணம் பெரிதும் வலிமையுடையதாகக் காணப்பட்டாலும் அதை முற்றிலும் கெட்ட குணம் என்று சொல்லக்கூடாது. பிள்ளைகள் எந்த எந்த விஷயங்களில் இக் குணத்தை வெளிக்காட்டுகிறார்கள் என்று நாம் கவனிக்க வேண்டும். பின்பு அவர்களைத் தங்களுடைய ஜீவியத்திற்குத் தக்கதான காரியங்களில் முயற்சித்து அந்தக் குணத்தைக் காட்டப் பழக்கவேண்டும். உபாத்தினியம்மாளைப் பிரியப்படுத்தவேண்டும் என்ற நோக்கத்தோடு சிறு பிள்ளைகள் நன்றாய் வேலை செய்தால் நாம் அதைக்குறித்து ஒன்றும்

சொல்லத்தேவையில்லை. ஆனால் எட்டாம் வகுப்பில் படிக்கும் மாணாக்கர்களுக்கு உபாத்தினி அம்மாளைப் பிரியப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தைப் பார்க்கிலும் மேலான நோக்கம் அவசியம். அந்த வகுப்பிலுள்ள பிள்ளைகள் ஒருவருடைய பிரியத்தைமட்டும் பாராமல், அநேகருக்குப் பிரியமானதும் நன்மையானதுமான காரியத்தைச் செய்யப் பிரயாசப்படவேண்டும். கடவுளுடைய அன்பைப் பெறவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டால் நாம் மனிதர்களுடைய நன்றியறிதலை எதிர்பார்க்காமல் அவர்களுடைய நன்மையைமட்டும் கருதி எதையும் செய்யவேண்டும்.

### 4. மற்றவர்களை முந்திக்கொள்ள விரும்புதல். (போட்டிபோடும் குணம்)

இக் குணம் தன்னந்தனிமையாக அவ்வளவாய் வெளிப்படாது; ஆனால் மற்றநேக குணங்களோடு வெளிப்படும். மனிதர்கள் காட்டில் வேட்டையாடப் போகும்பொழுதாவது ஏதாவது ஒன்றைக் கண்டுபிடிக்க முயற்சிக்கும் பொழுதாவது சமீபத்தில் யாராவது தங்களுடைய காரியங்களைப் பார்த்துக்கொண்டிருப்பதாக அறிந்தால், உடனே ஒவ்வொரு மனிதனும் மற்றவர்களைவிடத் தான் முந்தி நின்று அதிக ஊக்கத்தோடு தன் திறமையைக் காட்டப்பிரயாசப்படுவான். இதே குணம் குழந்தைகளிடத்திலும் காணப்படுகின்றது. ஆகையால், அவர்கள் விளையாடும் விளையாட்டில் பிள்ளைகளை முழு ஊக்கத்தோடு முயற்சிக்கச் செய்வது எளிது. ஆனால் அதே குணத்தைப் படிப்பு, உண்மை சொல்லுதல் முதலிய காரியங்களில் காட்டப் பிள்ளைகளைத் தூண்டுவது கஷ்டமான காரியம். மற்றவர்களை முந்திக்கொள்ளவேண்டும் என்ற இக்குணத்தினாலேதான் எல்லாவிதமான முயற்சிகளும் முன்னேற்றமடைகின்றன. வியாபாரம், வர்த்தகம், படிப்பு, கைத்தொழில், பிரயாணம், ஏற்றுமதி, இறக்குமதி

பண்ட மாற்றுதல், முதலிய பல காரியங்களிலும் முக்கியமாய் வெளிப்படும் குணம் போட்டிபோடுவதேயாம். இதே குணம் மதவிஷயங்களிலுங்கூடப் பெரிதும் வெளிப்படுகின்றது. ஆனால் இதில் ஒரு குறைவுண்டு என்பது வெகு இலேசாய் புலப்படும். இக்குணம் மற்றவர்களிடத்தில் பட்சமாயிருத்தல் என்னும் குணத்திற்கு எதிரிடையாயிருக்கலாம். என்றாலும் இதிலிருந்தும் ஒரு நன்மை ஏற்படுகின்றது. இக்குணத்தினால் நாம் அனாவசியமான காரியங்களை விலக்கமுடியும். இந்த வழியாக, அனாவசியமான காரியங்களில் மிகவும் கவலைகொண்ட நமது முன்னோரைப் பார்க்கிலும் நாம் முன்னேறிவருகிறோம். கீழ் வகுப்புக்களில் உள்ள ஒரு பிள்ளையை மற்றப் பிள்ளைகளைப் பார்க்கிலும் அதிகமாய்ப் பிரயாசப்படத் தூண்டலாம். கூட்டமாய்க்கூடி வேலைசெய்வதினாலுண்டாகும் நன்மையைப் பிள்ளைகள் இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. பிள்ளைகள் கூட்டமாய்க்கூடி வேலை செய்யப் பழகினதும் ஒரு வகுப்பிலுள்ள மாணாக்கர்கள் மற்ற வகுப்புக்களிலுள்ள மாணாக்கர்களைப் பார்க்கிலும் தேர்ந்தவர்களாயிருக்க அவர்களை உற்சாகப் படுத்துவது நல்லது. அப்படியே படிப்படியாக ஒரு பள்ளிக்கூடத்திலுள்ள மாணாக்கர்களைப் பார்க்கிலும் தேர்ந்தவர்களாயிருக்க அவர்களை உற்சாகப்படுத்துவது நல்லது. இங்ஙனமே கிரமமாக ஒரு பள்ளிக்கூடத்திலுள்ள மாணாக்கர்கள் மற்றப் பள்ளிக்கூடங்களிலுள்ள மாணாக்கர்களிலும் சிறந்தவர்களாய் இருக்கவும், ஒரு பட்டணத்தில் உள்ளவர்கள் மற்றப் பட்டணங்களில் உள்ளவர்களைப் பார்க்கிலும் முந்தியிருக்கவும் உற்சாகப்படுத்தலாம்.

## 5. மற்றவர்களைப்போல் செய்யும் குணம்.

மனிதர்கள் சிறு பிராயத்திலிருந்து மற்றவர்களது செய்கைகளைக் கண்டு அதுபோலவே செய்யப் பிரயாசப்படுகிறார்

கள். இக் குணம் மிருகங்களிடத்தில் அதிகமாய்க் காணப்படு கின்றது. சிறுவர்கள் தாம் கேள்விப்படுகிற எல்லாவிதமான ஓசைகளையும் மறுபடியும் புறப்படுவிக்கப் பிரயாசப்படுகிறார் கள்; மிருகங்கள் நடப்பதுபோல நடக்கப் பார்க்கிறார்கள். வகுப்பில் உபாத்தியாயர் கற்றுக்கொடுப்பதுபோல எழுந்து நின்று மற்றவர்களுக்குக் கற்றுக்கொடுக்கிறார்கள்; ஒருவர் பிரசங்கம் பண்ணுவதைக் கண்டால் அதுபோல பிரசங்கம் பண்ண முயலுகிறார்கள். இப்படியே சிறு பிள்ளைகள் கொஞ் சம் கொஞ்சமாக மற்றவர்களுடைய செய்கைகளைக் கண்டு நடிக்க முயன்று, புதிது புதிதான பல காரியங்களைச் செய்யத் தைரியங்கொள்ளுகின்றனர். இந்தக் குணம் வழக்கத்தினாலே உண்டாகின்றதென்று சிலர் சொல்லுகிறார்கள். இக் குணம் தன்னியல்பிலேயே அவ்வளவாய் வெளிப்படுவதில்லை; வழக் கத்தினால் வெளிப்படும்; அப்படியானால், நாம் வழக்கத்தைப் பலப்படுத்துகிற முறையிலேயே மற்றவர்களைக்கண்டு செய் யும் குணத்தையும் பலப்படுத்தலாம். மற்றவர்களைக் கண்டு செய்தல் அவசியம். ஏனென்றால், பிள்ளைகள் ஒவ்வொரு வரும் தனித்தனியே ஒவ்வொரு காரியத்தையும் பரிசோதித் துப் பார்த்துப் படிக்கத் தேவையில்லை. ஒரு பிள்ளை தன் தாய் சமையல்வேலை செய்யும்பொழுது பார்த்துக்கொண்டே யிருக்கிறது. பின்பு தானும் தன் தாயைப்போல் சமையல் செய்ய ஆரம்பிக்கிறாள். தன் தந்தை மற்றவர்களிடம் பேசு கிற முறையைப் பார்த்துக்கொண்டிருக்கிற மகன் தன் தந்தை யைப்போலவே பேசப் பழகுகிறான். அப்படியானால், இந்தக் குணம் சிறுவர்களிடத்தில் பள்ளிக்கூட விஷயமாகவும் இருக்கவேண்டும் என்று திட்டமாய்ச் சொல்லலாம். இது, சித்திரம் வரையவும், பாடங்கள் வாசிக்கவும், கைவேலை செய்யவும், நற்குணமடையவும் மிகவும் உதவியாய் இருக்கும். ஆனால், பிள்ளைகள் மற்றவர்கள் செய்கிறதைப் பார்த்துச் செய்யும் குணத்தைமட்டுங்கொண்டு, தங்கள் சுயநினைவால்

செய்யும் சக்தியைப் பெறாமல் இருந்துவிட்டால், அது மிகவும் விசனகரமான விஷயமாம். திறமையையும் நேரத்தையும் வீணிலே செலவு செய்யாதிருக்கும்படி முதலில் மற்றவர்கள் செய்வதைக் கண்டு செய்யும்படிப் பிள்ளைகளை விட்டுவிட வேண்டும். ஆனால் நாளடைவில் தம் சொந்தயோசனையினால் எதையும் செய்யப் பிள்ளைகளைத் தூண்டுவது உபாத்தியாயர் கடமையாகும்.

## ஆண் பெண் தன்மை.

மனிதர் யாவருக்கும் தங்கள் இனத்தைத் தாமே படைக்கப் பெரிதும் ஆசை உண்டு. இவ்விஷயத்தில் எவ்விதப் பாவமும் இல்லை. இவ்வாசையைக் கடவுளே மனிதர்களுக்குக் கொடுத்திருக்கிறார். ஆகையால், பிள்ளைகள் இது விஷயமாக வெட்கப்படாதபடி பெரியவர்கள் அன்போடு சிறுவரிடத்தில் காணப்படும் உணர்ச்சிகளைக் கவனிக்கவேண்டும்; பின்பு அவ்வுணர்ச்சிகள் பரிசுத்தமான வழிகளிலே செல்லும்படிப் பிள்ளைகளை நடத்திவரவேண்டும். இந்த ஆசை எட்டு வயதுச் சிறுவர்களில் வெவ்வேறு விதமாய்க் காணப்படும். வயதாகுந்தோறும் ஒரு பிள்ளை மற்றப் பிள்ளைகளை ஒரே விதமாய் நேசிக்காமல் ஏதாவது ஒரு பிள்ளையைமட்டும் விசேஷித்த விதமாய் நேசித்து அதனோடு சிநேகமாய் இருக்கும். சில சமயங்களில், ஒரு சிறு பிள்ளை தன்னிலும் அதிக வயதானவரிடத்திற்கூட மிகவும் நேசமாய் இருப்பதுண்டு. பிள்ளைகள் வீட்டு மிருகங்களிடத்திலும் அதிக பட்சமாய் இருப்பதைப் பார்க்கலாம். பிள்ளைகளுக்குத் தாம் நேசிக்கிற வேறொரு பிள்ளையையோ, ஆளையோ, மிருகத்தையோ தொடவும் பிடிக்கவும் முத்தமிடவும் அதிக ஆசை உண்டு. சிறுவர்களிடத்தில் காணப்படும் அந்த ஆசையைத் தப்பு என்று சொல்லாமல் அதை எப்படித் தாம் நேசிப்பவர்களிடத்தில் காட்டவேண்டுமென்றும்,

எப்படி அநேக காரியங்களில் இருவர்கூடி சந்தோஷமாய் இருக்கலாம் என்றும் பிள்ளைகளை உணரச் செய்யவேண்டும்; சேர்ந்து விளையாடுகிறதற்கும், சேர்ந்து படிப்பதற்கும், சேர் ...லைகள் செய்வதற்கும் ஏற்ற வழிகளைச் சிறு ...கவேண்டும்.

...ரியவர்கள் கவனிக்கவேண்டியவை

...யில் சுத்தமான இடங்களில் வெகு ...ப் பிள்ளைகளை விட்டுவிடவேண்டும்.

...டுத்துத் தூங்கும்பொழுது ஒவ்வொரு ...தம் இடங்களில் தனியே படுத்து இருக்கின் ...றா என்று கவனிக்கவேண்டும்.

3. கண் விழித்தவுடனே படுக்கையை விட்டு எழுந்திருக்கப் பிள்ளைகளைப் பழக்கவேண்டும்.

4. பிள்ளைகளின் உடம்பைத் தொட்டு ஒருபோதும் தண்டிக்கக்கூடாது.

5. பிள்ளைகள் முன்னிலையில் ஆண் பெண் தன்மையைக் குறித்துப் பேசும்பொழுது, கடவுளாற் கொடுக்கப்பட்டுச் செடிகளிலும் மிருகங்களிலும் மனுஷரிலும் காணும் இயற்கையான ஆசை இதுவே என்று காட்டவேண்டுமேயல்லாது அதைக்குறித்துப் பேசும்பொழுது கேலித்தனமாய் சிரிப்பதும் சம்பாஷிப்பதும் நல்லதல்லவென்று உணரச்செய்யவேண்டும். இப்படியே சிறுவர் உள்ளத்தில் வணக்கமான உணர்ச்சிகளை உண்டுபண்ணவேண்டும்.

---

## III. ஐம்புலன்களைப் பெலப்படுத்துதல்

ஒரு பிள்ளையின் ஐம்புலன்கள் ஐந்து வாசல்களைப்போல இருக்கின்றன. இந்த வாசல்களின் வழியாய் [illegible] வநேக உணர்ச்சிகள் மனத்தினுள் பிரவேசிக்[illegible] பட்ட உணர்ச்சி தெரிந்தவுடனே [illegible] யுண்டாகிறது. இந்த மன அதிர்ச்[illegible] ஏதோ ஒன்றைச் செய்ய ஆசைப்பட்[illegible] மாய் உணர்ச்சி எப்படி உள்ளே தெரி[illegible] ஐம்புலன்களின் மூலமாய்த் தன் உ[illegible] களை வெளிப்படுத்தும். இரண்டு விதமா[illegible] படிப்பிக்கவேண்டும். முதலாவது உள்ளே பிர[illegible] உணர்ச்சிகளைக் கவனித்து அநேக நல்ல சுத்த யோசனை களை உண்டாக்கப் பிரயாசப்படவேண்டும். இரண்டாவது பிள்ளைக்குத் தன் யோசனைகள் உண்டானவுடனே அவைகளை வெளிப்படுத்தும் சிலாக்கியம் கொடுக்கவேண்டும். பிள்ளை தன் யோசனைகளை வெளிப்படுத்தினவுடனே திரும்பவும் புது உணர்ச்சி மனதினுள் பிரவேசிக்கும். அப்படியே மாறி மாறி இந்த ஆச்சரியமான ஐந்து சக்திகள் திடப்படுகின்றன.

இந்த ஐந்து சக்திகளில் முதலாவது வெளிப்படுவது ருசிக்கும் சக்தியேயாம். பிள்ளையின் சரீரத்திற்கு வேண்டியது கிடைக்கும்படியாக பசி உண்டாகிறது. பிள்ளை அழு கிறது; ஆனால் வெகு சீக்கிரமாய்ச் சாப்பாடு விஷயத்தில் வித்தியாசங்கள் கொஞ்சந் தெரியும். பாலில் ஏதோ சரியா யில்லாவிட்டால் பிள்ளை தள்ளிவிடும். திருப்தியுண்டானால் பிள்ளை எத்தனையோ சிறு அசைவுகளினாலே சந்தோஷ முண்டு என்று காட்டுகிறது. இந்தச் சக்தியின் பிரயோஜன மென்ன? நம்முடைய சுகத்தைக் காப்பாற்றுகிறதற்காக இந் தச் சக்தியின் மூலமாய் வெவ்வேறு ருசிகளை அறிந்து அநு பவத்தினாலே சுகத்துக்கு வேண்டியது எது என்று தெரிந்து

கண்ட கண்டபொருளைச் சாப்பிடாமல் தமது ஆசையை அடக்கிக்கொண்டு சரியான சாப்பாட்டை அறிந்து சாப்பிட்டு நம்முடைய பிள்ளைகளுக்கும் கொடுப்பது நமது முக்கியக் கடமையாகும். இந்த விஷயத்தில் தாய்மார், வீடுகளில் பிள்ளைகட்கு அதிக உதவி செய்யக்கூடும். ஆனால் தாய்மார் அடிக்கடி, பிள்ளை அக்காலத்தில் விசனப்படுமே என்று நினைத்து இந்த நல்ல சக்தியை கெடுதியான காரியங்களுக்காக உபயோகப்படுத்த விட்டுவிடுகிறார்கள். சாப்பாட்டு விஷயமாகச் சிறு பிளளைகளுக்கு இரண்டு காரியங்கள் அதிக அவசியம். ஒன்று நேரத்தின் ஒழுங்கு. தினந்தோறும் சாப்பாடு ஒழுங்காய் அந்தந்த நேரத்தில் கிடைக்குமென்று பிள்ளைகளுக்குத் தெரிந்தால் வரவர மற்ற நேரங்களில் சாப்பிட ஆசை இராது.

தாய் தினந்தோறும் தன் பிள்ளைகளுக்குக் குறித்தநேரத்தில் ஒழுங்காய்ச் சாப்பாடு கொடுக்கும் கடமையிலிருந்து தவறினபிறகு தன் பிள்ளையைத் திருத்த எவ்வளவு கண்டிப்பாயிருந்தாலும் முடியாது. அவள் தன் பிள்ளை நினைத்த நேரமெல்லாம் தொந்தரவு செய்வதைச் சகியாமல் அதை நிறுத்தப் பிள்ளைக்கு ஏதாவது தின்னக் கொடுப்பாள். இரண்டாவது, மற்றெல்லாக் காரியங்களிலும் பிள்ளைகள் தங்களுக்குப் பிரியமில்லாததைப் பிரயாசத்தினாலும் படிப்பினாலும் திருப்தியோடு செய்யப் படிக்கிறார்களல்லவா? அதேவிதமாய்ச் சாப்பாட்டு விஷயத்திலுங்கூட சுகத்துக்கு வேண்டியதைப் பிள்ளைகள் சந்தோஷமாய் சாப்பிடப் படிக்கவேண்டும். பலபொழுதும் தாய்மார் தங்கள் பிள்ளைகளை விளையாட்டாலும் சிரிப்பான சம்பாஷணைகளாலும் நடத்தி நல்ல சத்தியங்களைக் கற்பிக்கலாம்.

இதற்கும் ருசிக்கும் சக்திக்கும் சப்பந்தமென்னவென்று கேட்பீர்கள்; அதிக சம்பந்தமுண்டு. ஏனென்றால், முதலாவது, சாப்பாட்டு விஷயத்தில் பிள்ளையினுடைய மனச் சந்

தோஷத்தையும், சரீர இச்சைகளையும் திருப்தி செய்வதுமட்டும் நோக்கமன்று; சரீரத்தின் பெலனை அடக்கிக்கொண்டு அதின் வல்லமையைப் பூரணமாய்ப் பிரயோஜனப்படுத்துகிறதற்காக சாப்பிடுகிறோமென்று பிள்ளையை உணரச் செய்யவேண்டும். ஆத்தும விஷயங்களிலும் இப்படி அடக்கத்தோடும் ஒழுங்கோடும் நடக்கக் கற்பிக்கவேண்டும். ஒரு மணி நேரத்தின் சந்தோஷத்திற்காகத் தாய் தன் பிள்ளைக்கு வேண்டியதைக் கொடுத்து அந்தப் பிள்ளையின் வாயில் ஒரு கெட்ட ஆசையை உண்டாக்கிவிடுவாளாயின் பிற்காலத்தில் தொடர்ச்சியாய்த் தோன்றுகிற பலாபலனை அடைவாள். ருசிக்கும் சக்தியை பலப்படுத்துவதற்குக் காரணமும் மேன்மையான நோக்கமும் உண்டென்று பிள்ளைகளுக்குக் காட்ட பிரயாசப்படுவோமாக. ஒரு தாய் தன் குழந்தையோடு பிரயாணம் பண்ணிக்கொண்டிருந்தாள். பிள்ளை நூதனமான காட்சியைப் பார்த்து ஆச்சரியப்பட்டு அதிக சந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தது. சற்று நேரத்திற்குப் பிறகு தாய் தானே பலகாரம் சாப்பிட ஆசைப்பட்டதோடு தன் பிள்ளைக்கும் கொடுக்கவேண்டுமென்று நினைத்து, பிள்ளையின் வாயில் சிறிது பலகாரத்தை வைத்தாள். பிள்ளை வேண்டாமென்று தள்ளினபோது தாய், "என்னம்மா, கொஞ்சம் சாப்பிட்டுப் பாரு; மிகவும் ருசியாய் இருக்கிறது" என்று சொல்லி அந்தப் பிள்ளை அதை இச்சிக்கும்படிச் செய்தாள். அப்புறம் பிள்ளை வரவர அதிகத் தொந்தரவு செய்தபோது தாய் கோபப்பட்டு "நீ என்ன தொந்தரவு செய்கிறாய்" என்று முறுமுறுத்தாள். இது நாடோறும் நடக்கிற காரியம். தாய்மாரே! ருசிக்கும் சக்தியின் மேன்மையான நோக்கத்தை நிறைவேற்றுகிறீர்களா? இந்தச் சக்தியின்மூலமாய் ஒரு காரியத்தைத் தீர்மானித்து அதில் உறுதியாய் நிற்கும் சக்தியைப் பிள்ளைகளிடத்தில் பலப்படுத்தலாம்; அல்லது அவர்களைக் கெடுக்கலாம். நீங்கள் இவற்றில் எதைச் செய்கிறீர்கள்?

அதினாலேதான், முகரும் சக்திக்கும் ருசிக்கும் சக்திக்கும் அதிக சம்பந்தம் உண்டென்கிறோம். அதையும் விட்டிலேதான் விசேஷமாய்ப் பலப்படுத்தக்கூடும். கண்ணுக்கு ஒரு பழம் அதிக நேர்த்தியாய்த் தோன்றினாலும், துர்நாற்றத்தினால் கெட்டுப்போனது என்று நமக்குத்தெரியும். ஒரு பிள்ளைக்கு இருக்கிற அழகான உடுப்புக்கள் சுத்தமில்லாவிட்டால் நாசியின் வழியாய் அவற்றின் அசுத்தம் வெளிப்படும். வித்தியாசங்களைக் கவனிப்பதற்காகவே நமக்கு இந்தச் சக்திகள் ஏற்பட்டிருக்கின்றன. வீட்டில் எது சுத்தம் எது அசுத்தம் என்று முகர்ந்து பார்த்துச் சொல்லத் தாய்மார் தங்கள் மாதிரியினாலும் பேச்சினாலும் பிள்ளைகளுக்குக் காட்டினால் வரவர அவர்கள் தாங்களே கவனித்துச் சுத்தமானவைகளை விரும்புவார்கள். பிள்ளைகள் வித்தியாசங்களை கவனிக்காவிட்டால் வரவர அவர்களுடைய சக்தி குறைந்து போகும். அவர்களுக்கு அசுத்தமான நாற்றம் கொஞ்சம் கூட தெரியமாட்டாது. இந்த இரண்டு சக்திகளும் எப்படிச் சேர்ந்திருக்குமோ அப்படியே கேட்கும் சக்தியும் பார்க்கும் சக்தியும் அதிக சம்பந்தப்பட்டிருக்கும். சிறு பிள்ளைகளுக்கு இந்த இரண்டும் எவ்வளவு கூர்மையாய் இருக்கும் என்று பலர் மறந்துபோகிறார்கள். அதினாலே, தாய், பிள்ளை கேட்கத்தக்கதாக அதைப் புகழ்ந்து பேசி அந்தப் பிள்ளைக்குப் பெருமையான குணத்தையும் தன்னயத்தையும் உண்டாக்காமல் இந்த உலகத்தின் விசித்திரங்களை விசாரிக்க அதன் சக்தி முழுவதையும் உபயோகிக்குமாறு கற்பித்தால், எவ்வளவு நன்மையாகும். பெரியவர்களான பிறகும், கண்ணிருந்தும் குருடராயிருக்கிறோம் என்றும், காது இருந்தும் அநேக இனிமையான சத்தங்களை அறியச் சக்தியில்லை என்றும் நமக்கு உணர்ச்சி உண்டாகிறது. அப்பியாசம் இல்லாமல் எந்தச் சரீரமும் எந்தச் சக்தியும் தன் வல்லமையை இழந்துவிடும். ஐந்தாவது சக்தி

யைப்பற்றிப் படிக்கக்கூடிய விஷயங்கள் உண்டு. ஏனென்றால், மனுஷர் தம்கைகளின் சாமர்த்தியத்தை இன்னும் அவ்வளவாய்ச் சோதித்துப் பார்க்கவில்லை. பலர் கைவேலை அவமானம் என்று நினைக்கிறதினால், தடவிப்பார்க்கும் சக்தியால் உணரக்கூடிய அறிவை இழந்துவிடுகிறார்கள். குருடர் தங்கள் கஷ்டத்தினாலே இதை ஆச்சரியமாய்க் கண்டுபிடிக்கிறார்கள். சிறு பிள்ளைகளுக்கு மற்றச் சக்திகள் பலப்படுகிறதற்கு முன் இந்தச் சக்தியைத்தான் உபயோகிக்க அதிக ஆசை. அப்பொழுது தான் அதிகமாய் எல்லா நேர்த்தியான சாமான்களையும் அழித்து நஷ்டப்படுத்துகிறார்கள். எல்லாச் சாமான்களையும் கெடுக்கிறார்களே என்று தாய்மார் விசனப்படுகிறார்கள். ஆனால் அடிக்கடி அதில் கெட்ட நோக்கம் ஒன்றும் இல்லை; பிள்ளைகளுக்குச் சாமான்களைச் சோதித்துப் பார்க்க அதிக ஆசை.

பார்க்கும் சக்தியினால் போதுமான திருப்தியில்லை. ஒரு சாமானைப் பிரித்துப்போட்டால் அதின் தன்மை அழிந்து போய்விடும் என்ற பாடத்தைப் பிள்ளைகள் இன்னும் கற்றுக் கொள்ளவில்லை. என்ன செய்வோம்? எந்தச் சாமானையும் அழிக்க விட்டுவிடலாமா? அப்படிச் செய்யாமல் கிண்டர் கார்ட்டன் வகுப்பில் இந்த ஐந்து சக்திகளைப் பலப்படுத்தவும், சக்திகளின் மூலமாய் வரும் ஆசைகளுக்குத் திருப்தி செய்யவும் அநேக விதமான உடையாத சாமான்களை வைத்துக்கொண்டு பிள்ளைகள் தாங்களே அவைகளைக் கண்டுபிடிக்கக்கூடிய பாடங்களை உணரவும் விட்டுவிடலாமா?

---

# IV. கற்றுக் கொடுப்பதற்குரிய விதிகள்

ஒவ்வொரு பிள்ளையும் சில இயற்கைக் குணங்களோடு பிறந்திருக்கின்றது என்று பார்த்திருக்கிறோம். பிள்ளை தன் இயற்கைக் குணங்களோடு வேறு பல வழக்கங்களையும் கற்றுக்கொள்ளுகின்றது என்று சொல்லலாம். கல்வி விஷயமாய் நாம் முதன் முதலில் செய்யவேண்டுவது இயற்கையான குணங்களைப் பலப்படுத்துவதேயாம். கைகள் ஒரு நோக்கத்தோடு திறமை அடைவதே சக்தியாம். அப்பொழுது அந்தக் கைகளுக்கு வழக்கம் என்ற ஒரு குணம் ஏற்படுகிறது. நல்ல வழக்கங்களை ஸ்தாபிப்பது மிகவும் முக்கியமானது. பெற்றோரும் உபாத்திமாரும் மற்றெல்லாக் காரியங்களைப் பார்க்கிலும் சிறுவர்களுக்கு நல்ல வழக்கங்களை உண்டுபண்ணும் முறைகளை முழு மனதோடு படித்துக் கொண்டேயிருந்தால், குடும்பங்களிலும் பள்ளிக்கூடங்களிலும் பெரிய குறைவுகள் காணப்படா. பிள்ளைகள் எவ்வளவு நன்றாய்ப் படித்தபோதிலும் அந்தப் படிப்பைத் தகுந்தபடி உபயோகிப்பதற்குச் சிறந்த நற்பழக்கங்கள் இல்லாவிட்டால் என்ன பிரயோஜனம்? ஒரு உபாத்தியாயரின் முதல் கடமை வகுப்பிலுள்ள மாணவர்களுடைய வயதுக்கு ஏற்ற வழக்கங்களைக் கற்பிப்பதேயாம். இந்த வழக்கங்களின் முக்கிய நோக்கம் என்னவென்றால், பிள்ளை தானே தன் சக்திகளைப் பூரணமாய் உபயோகித்துத் தனக்கு வேண்டியவைகளை முழு பலத்தோடு தேடி அடைய பிரயாசப்படும் குணத்தைத் தருவதேயாம். பிள்ளைகளிடத்தில் பல நற்பழக்கங்களையும் வழக்கங்களையும் எடுத்தெடுத்துச் சொல்லாமல் அவர்களுக்குச் சிறிது சிறிதாய் நற்பழக்கங்கள் பலவற்றை மேன்மேலும் அதிக திட்டவட்டமாகக் கற்பிக்கவேண்டும். ஒரு தாய் தன் பிள்ளையிடம் 'சுத்தமாயிரு, சுத்தமாயிரு' என்று ஆயிரம் முறை கத்தினாலும் பிரயோஜனமில்லை. ஆனால் அந்தப் பிள்ளை

சிறு பிராயத்திலிருந்தே நாள்தோறும் சுத்தம் பேணும் நல்ல வழக்கங்களில் வளர்ந்து வந்திருந்தால் அது ஒரு சின்னஞ் சிறு குடிசையிலிருந்தபோதிலும் சுத்தமாகவேயிருக்கும். பிள்ளைகள் வழக்கங்களை எப்படிக் கற்றுக்கொள்கிறார்கள் என்பதுதான் இப்பொழுது நாம் கேட்கவேண்டிய முக்கிய கேள்வி. அக்கேள்வியின் விடைகளைத் தெரிந்து கொள்ளலாம்.

### 1. அப்பியாசத்தின் மூலமாய்ப் பழக்கம் ஏற்படும்.

எதையும் திரும்பத் திரும்பச் செய்வதினாலே முதலில் ஏற்படும கஷ்டம் குறைந்துபோகிறது. ஒரு பிள்ளை நடக்கக் கற்றுக்கொள்ளும்பொழுது எத்தனை முறை எழுந்திருக்கிறது? எத்தனை முறை நிற்கிறது? எத்தனைமுறை விழுகிறது? திரும்பத் திரும்பப் புறப்பட்டு விழுந்து எழுந்து நின்று, பிறகு கொஞ்சதூரம் சென்று முடிவிலே நடக்கும் விஷயத்தில் எவ்விதக் கவலையும் பயமும் யோசனையும் இல்லாமல், நடப்பது ஓர் இயற்கையான குணம்போலத் தோன்றும்படி, எங்கும் நடந்துபோகிறதல்லவா ? இது சரீரத்தை ஒட்டின காரியம். அப்படியே மன விஷயமாகவும் கையை உபயோகிக்கும் விஷயத்திலும், கோபத்தை அடக்கும் முயற்சியிலும், பாட்டுப்பாடும் பயிற்சியிலும், ஆத்தும ஜீவியத்திலும், இன்னும் மற்றெல்லா விஷயங்களிலும் அந்த விதியே முன்நின்று நம்மை நடத்துகின்றது என்று நாம் கண்டுகொள்ளலாம். ஏதாவது ஒரு பழக்கத்தை வழக்கத்திற்குக் கொண்டுவரவேண்டுமானால் நாம் அதை அப்பியாசிக்கவேண்டும்.

இப்பொழுது வழக்கத்தை ஒட்டின அந்த விதியைக் கற்றுக்கொண்ட அந்த உபாத்திமார்களின் கடமை என்னவென்றால், பிள்ளைகள் அவர்கள் கற்றுக்கொள்ளும் பாடங்களைப் பள்ளிக்கூடத்திலும், வீட்டிலும், தங்கள் சொந்த

ஜீவியத்திலும் உபயோகிக்கிறார்களா என்று கவனித்து அவர்களை அப்படிச் செய்யத் தூண்டுவதேயாம்.

## 2. காரிய சித்தியினாலும் காரியசித்தி பெருமையினாலும் பழக்கங்கள் கற்பிக்கப்படுகின்றன.

ஒரு பெண்ணுக்குச் சமையல் வேலை கொஞ்சம் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆசை உண்டு. ஆகையால் அவள் தன் தாயின் கட்டளைகளைக் கவனமாய்க் கேட்டுச் சமைக்கிறாள். தான் சமைத்த சாப்பாட்டை உருசி பார்த்து எல்லாம் நன்றாய் இருக்கிறது என்று தெரிந்துகொள்ளுகிறாள். பிறகு மற்றவர்களும் அதைச் சாப்பிட்டு அவளுடைய சமையல் திறத்தைக்குறித்து மெச்சிப் பேசுகிறார்கள். அப்பொழுது அந்தப் பெண்ணுக்குச் சமையல் வேலையை நன்றாய்க் கற்றுக்கொள்ளவேண்டுமென்ற ஆசை அதிகரிக்கவே, அவள் அதற்காகப் பிரயாசப்படுவாள். ஆகையால் அந்தப் பெண்ணுக்கு அந்தப் பயிற்சியில் ஆசையைத் தூண்டி அதிக ஊக்கம் எடுத்துக்கொள்ளச் செய்வதற்கு அவளுடைய முதல் முயற்சி காரியசித்தியானதேயாம். பிறகு அவள் நாலைந்து வருஷம் சமையல் வேலையே செய்யாமல் இருந்தால், அவளுக்குச் சமையல் வேலையில் ஏற்பட்டிருந்த முந்தின திறமை குறைந்துபோகும். ஒரு பையன் சைக்கில் ஏறிவிடப் படிக்கிறான் என்று வைத்துக்கொள்வோம்; அப்போது அவன் தினந்தோறும் சைக்கிலில் ஏற அப்பியாசம் செய்கிறான். வர வர, எந்த இடத்திற்கும் அதிகக் கஷ்டமில்லாமல் வெகு இலேசாய்ச் செல்லும்படிக்கான பழக்கம் ஏற்படும் என்று அறிகிறான். ஆனால் வியாதியினாலோ, வேறேதாவது இடையூறுகளினாலோ சைக்கில் ஏறப் பழகுவதைக் கொஞ்ச காலம் விட்டுவிடும்படி நேரிட்டால், மறுபடியும் வந்து பிரயாசப்படும்பொழுது தனக்குச் சைக்கில் விடும் விஷயத்தில் முன்

னிருந்த திறமை குறைந்திருக்கக் காண்பான். ஆகையால் எந்தக் காரியத்தையும் செய்யப் பழகவேண்டுமானல் முதன் முதலில் ஒன்றைச் செய்யும்பொழுது அது கொஞ்சம் காரிய சித்தியாகவேண்டும். அப்பொழுது நாம் அதில் பழகக் கற்றுக்கொள்ளுகிறோம். முதலில் கைகூடாமற்போனல் அதில் பழகப் பிரயாசப்படமாட்டோம்.

ஆகையால், முதலில் வெகு இலேசாய் காரியசித்தியாகும் காரியங்களில் முயற்சிக்கப் பிள்ளைகளைத் தூண்டவேண்டும். அப்பொழுது அவர்கள் அந்தக் காரியங்களைத் திட்டமாய்ப் படிப்பார்கள். ஆனல், ஏதாவது ஒரு அப்பியாசத்தை அல்லது ஏதாவது ஒரு கைத்தொழிலை ஏதோ ஒரு வகுப்பில், ஒரு நேரம் மட்டும் செய்வதினல் பிள்ளைகளுக்குப் படிப்பொன்றும் ஏற்படாது. பிள்ளைகளுக்குக் கொடுக்கப் படும் வேலைகள் அவர்களுக்குக் கைகூடாதபடி கஷ்டமாயிருந்தால் அதில் உள்ள தேர்ச்சி குறைந்துபோகும். இதை நாம் நன்றாய்க் கவனித்துப் பார்க்கும்பொழுது, 'முதல் அநுபவத்தின்மூலமாய் புதிய விஷயங்களைக் கொள்ளுதல்' என்னும் மூன்றாவது விதி ஒன்று உண்டென்று பார்க்கிறோம்.

### 3. அநுபவத்தைச் சம்பந்தப்படுத்துதல் மூலமாய்க் கற்றுக் கொள்ளுதல்.

ஒரு குழந்தை தொட்டிலில் படுத்துக்கொண்டிருக்கிறது. அப்பொழுது பக்கத்திலே தாய் தன் சிநேகிதியோடு பேசிக்கொண்டிருக்கிறாள். பிள்ளை அழுகிறது. அவர்கள், பேச்சில் இரசப்பட்டிருந்தபடியால், பிள்ளையின் அழுகைக் குரலைக் கேட்கவில்லை. அல்லது அதைக் கவனியாமல் பேசிக்கொண்டிருக்கிறார்கள். அப்பொழுது பிள்ளை இன்னும் சத்தமாய் வீறிட்டு அழுகிறது. உடனே தாய் ஓடி

வந்து பிள்ளையைத் தூக்கி அணைத்துச் சீராட்டிச் சீக்கிரம் சமாதானப்படுத்துகிருள். இதிலிருந்து அந்தப் பிள்ளை என்ன பாடம் கற்றுக்கொண்டிருக்கும்? 'நாம் அதிக நேரம் முழு பலத்தோடு கத்தினுல் நமக்கு வேண்டியது வெகு சீக்கிரம் கட்டாயமாய்க் கிடைக்கும் என்பதல்லவா? ஆகையால் இந்தக் குழந்தை தன் முதல் அநுபவத்திலிருந்து, தனக்கு வேண்டியதை வெகு சீக்கிரம் அடையப் பலமாய் அழுவதே தகுந்த வழி என்று கற்றுக்கொள்ளுகிறது. அப்படிப்பை மறுபடியும் இரண்டு மூன்று தடவைகளில் உபயோகித்துப் பார்க்கிறது. அப்பொழுது தான் நினைத்தது கைகூடிவிட்டால் அதுவே தகுந்த வழியென்று அதைப் பழக்கத்திற்குக் கொண்டுவருகிறது. முடிவில் அந்தக் குழந்தை அழுது சாதிக்கும் அழுகுணிப் பிள்ளையாய்விடுகிறது.

ஒரு தாய் தன் எட்டு வயதான பிள்ளையிடம், 'வேண்டாம்; வேண்டாம்' என்று சில காரியங்களிலும், 'மாட்டேன்; மாட்டேன்' என்று வேறு சில காரியங்களிலும் பல முறையும் சொல்லிப் பார்க்கிருள். என்றுலும் அந்தப் பிள்ளை நச்சரிப்பாய் 'அம்மா! அம்மா!' என்று கெஞ்சிக் கெஞ்சி அரித்துக்கொண்டேயிருக்கிறது. ஆனுல் பக்கத்து வீட்டுத் தாய் தன் பிள்ளையிடம் ஏதாவது ஒரு காரியத்தில் 'வேண்டாம்' என்ருவது, 'மாட்டேன்' என்ருவது சொல்லி விட்டால், அதன்பிறகு அந்தப் பிள்ளை சும்மா இருந்துவிடுகின்றது. அவ்விரு பிள்ளைகளுடைய நடத்தைக்கும் காரணம் என்ன? முதற் பிள்ளையை எடுத்துக்கொள்ளுவோம். அது தன் தாயிடம் ஒன்றைக் கேட்கின்றது. அப்பொழுது தாய் 'வேண்டாம்' என்று மறுக்கிருள். எத்தனையோமுறை கண்டிப்பாய்ச் சொல்லிப் பார்க்கிருள். என்றுலும் முடிவில் தன் பிள்ளையினுடைய நச்சரிப்பைப் பொறுக்கமுடியாமல்

அதன் விருப்பத்திற்கு இணங்குகிருள். இதிலிருந்து அந்தப் பிள்ளை ஒரு பாடம் கற்றுக்கொண்டுவிட்டது. என்னவென்ருல், தன் தாய் முதலில் எவ்வளவு கண்டிப்பாய் இருந்தாலும் தான் ஓயாமல் பஞ்சரித்தால் தன் விருப்பத்திற்கு இணங்குவாள் என்று தெரிந்துகொண்டுவிட்டது. அதனுலேதான் அது ஓயாமல் தன் தாயைப் பஞ்சரித்துத் தன் காரியங்களைச் சாதித்துக்கொள்ளுகிறது. ஆனுல் இரண்டாவது பிள்ளையோ, தான் முதலில் ஒன்றைத் தன் தாயிடம் கேட்கும்பொழுது, அவள் 'வேண்டாம்' என்று சொல்லி விடுகிருள். அப்பொழுது பிள்ளை பஞ்சரித்துப் பார்க்கிறது. என்ருலும் தாய் தன் முந்திய தீர்மானத்திலிருந்து மாருமல் இருந்துவிடுகிருள். ஆகையால் அந்தப் பிள்ளை தன் முதல் அநுபவத்திலிருந்து, தன் தாய் ஒருமுறை 'வேண்டாம்' அல்லது, 'மாட்டேன்' என்று சொல்லிவிட்டால் அதன் பிறகு அவளைத் தொந்தரவு செய்வதில் பிரயோஜனமில்லை என்று தெரிந்துகொள்ளுகிறது. இப்படியே நாம் எந்தக் காரியத்தையும் கற்றுக்கொள்ளுகிருேம். நமக்கு வேண்டியது கிடைக்கும் என்று கண்டால், நமக்கு அது விஷயத்தில் முதலில் என்ன கஷ்டமிருந்தாலும் முடிவில் வரும் சந்தோஷத்தையே நினைக்கிருேம். கெஞ்சிக் கேட்பதினுலும் பஞ்சரிப்பதினுலும் காரியம் கைகூடிவராது என்று காணும்பொழுது, நாம் அந்த வழியைவிட்டு வேறு முறைகளைத் தேடி அவற்றைக்கொண்டு பரீட்சை பார்க்கிருேம். பிள்ளைகளில் அநேகர் தெருவில் இருக்கும்பொழுது மிகவும் கேவலமான கெட்ட வார்த்தைகளை உபயோகிக்கிருர்கள். ஏனென்ருல் பெரிய பிள்ளைகள் சிறு பிள்ளைகளுடைய கெட்ட வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்து அவர்களை மெச்சிக்கொள்ளுகிருர்கள். ஆனுல் அதே பிள்ளைகள் வீட்டிலிருக்கும் பொழுதோ அப்படிப்பட்ட வார்த்தைகள் ஒன்றுமே பேச மாட்டார்கள்; ஏனென்ருல் பெரியவர்கள் கோபித்துத் தண்

டிப்பார்கள் என்று அவர்களுக்கு நன்ருய்த் தெரியும். பிள்ளை கள் எப்பொழுதும் தங்களுக்குச் சந்தோஷத்தை உண்டு பண்ணும் காரியங்களையே திரும்பத் திரும்பச் செய்வார்கள்; துக்கத்தை உண்டுபண்ணும் காரியங்களை வெகு சீக்கிரம் விட்டுவிடுவார்கள்.

பிள்ளைகள் தங்களுக்குச் சந்தோஷத்தைத் தரும் வழி களை வெகு சீக்கிரம் கற்றுக்கொள்ளுகிருர்கள் என்பதை உபாத்தியாயர்களும் பெற்ரோர்களும் மறந்துவிடக்கூடாது. ஒரு பிள்ளை தனக்குச் சந்தோஷத்தைத் தரக்கூடிய காரி யத்தை எந்த வழியினல் கைகூடச் செய்கிறது என்று நன் ருய்க் கவனிக்கவேண்டும். தங்கள் காரியங்களைக் கைகூடப் பண்ணுவதில் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் வழக்கம் எது? என்று பெரியவர்கள் நன்ருய்க் கவனிக்கவேண்டும். சிறு பிள்ளைக்கு எந்தக் காரியத்திலும் ஏற்படவேண்டிய சந்தோ ஷமோ துக்கமோ வெகு சீக்கிரம் ஏற்படவேண்டும். அப்படி ஏற்படாவிட்டால், செய்த நல்ல காரியத்துக்கும் அதன் பல ஞகிய சந்தோஷத்திற்குமுள்ள சம்பந்தமாவது, செய்த கெட்ட காரியத்திற்கும் அதன் பலஞகிய துக்கத்திற்கும் உள்ள சம்பந்தமாவது தெரியாமற்போய்விடும். முதல் இரண்டு வகுப்புக்களில், பாடங்களைக் கற்றுக்கொடுப்பதைப் பார்க்கிலும் சரியான பழக்கவழக்கங்களை பிள்ளைகளுக்குக் கற்பிப்பதே உபாத்தியாயரின் முக்கிய கடமையாகும். இத ஞலேதான் மேல்நாடுகளில் சிறுவரின் மனத் தத்துவங்களை ஆராய்ந்த சாஸ்திரிகளில் சிலர் பிள்ளைகளுக்கு எந்தெந்த வழக்கங்கள் விசேஷமானது என்பதையும் அவற்றைக் கற்பிக் கும் முறைகளையும் தெளிவாய் அறிந்து வெளியிட்டிருக்கிருர் கள். அவர்கள் கண்டறிந்து வெளியிட்டிருக்கும் பழக்கவழக் கங்களை நமது உபாத்திமார்களின் உதவிக்காகக் கீழே வகுத் துக்கொடுக்கிறோம்.

## சுகத்திற்குரிய பழக்கவழக்கங்கள்.

1. பள்ளிக்கூடத்துக்குச் சுத்தமாய் வருதல்.

2. நகங்களை வெட்டிச் சுத்தமாய் வைத்துக்கொள்ளுதல்.

3. வாயிலேயாவது, மூக்கிலேயாவது, காதிலேயாவது விரலைவிட்டு நோண்டாது இருத்தல்.

4. மூக்குச் சிந்துவதில் சுத்தமான முறைகளைக் கையாடுதல்.

5. இருமலும் தும்பலும் வரும்பொழுது வாயையும் மூக்கையும் மூடிக்கொள்ளுதல்.

6. சுத்தமான தண்ணீரைக் குடித்தல்.

7. வகுப்பு நேரத்தில் தின்பண்டங்களைச் சாப்பிடாமல் இருத்தல்.

8. படுக்கவேண்டிய நேரத்தில் படுத்தல்.

9. நிற்கும்பொழுதும், உட்காரும்பொழுதும் நிமிர்ந்திருத்தல்.

10. புஸ்தகத்தையாவது, கைவேலைக்கு உபயோகிக்கிற பொருளையாவது சரியானபடி பிடித்துக்கொள்ளுதல்.

11. துப்புகிற விஷயத்தில் எச்சரிக்கையாய் இருத்தல்.

12. மல ஜலபாதைகள் செய்துகொள்வதில் ஒழுங்கான முறைகளைக் கையாடுதல்.

## சொந்த ஜீவியத்துக்குவேண்டிய பழக்கவழக்கங்கள்.

1. சரியான நேரத்தில் வகுப்புக்கு வருதல்.

2. உபாத்தியாயரின் கட்டளைக்கு உடனே கீழ்ப்படிதல்.

3. தரையைச் சுத்தமாய் வைத்துக்கொள்ளல்.

4. எடுத்த சாமான்களைத் திரும்பவும் சரியான இடத்தில் வைத்தல்.

5. கைவேலையில் உபயோகிக்கிற பொருட்களை வீணாய்ச் செலவழியாதிருத்தல்.

6. கதவைச் சாத்தும் பொழுதும் மேசை நாற்காலி முதலான சாமான்களைத் தூக்கிவைக்கும்பொழுதும் சத்தம் இல்லாமல் செய்தல்.

7. சாமான் உடைந்திருக்கக் கண்டாலும், உடையவரின்றிக் கிடக்கும் பொருளைக் கண்டு எடுத்தாலும் உடனே உபாத்தியாயரிடத்தில் தெரிவித்தல்.

8. எந்தக் காரியத்திலும் உண்மையே பேசுதல்.

9. புஸ்தகங்களைக் கவலையோடு உபயோகித்தல்.

10. தானே செய்த சாமான்களைத் தனக்கு வேண்டும் என்று காத்துக்கொள்ளுதல்.

11. ஒரு வேலையைக் கண்டதும் கஷ்டம் என்று நினைத்துக்கொண்டு சீக்கிரம் சோர்ந்து போகாமல் இருத்தல்.

12. ஜெபத்திலும் பாட்டிலும் வணக்கமாயிருத்தல்.

## மற்றவர்களோடு சேர்வதற்குரிய பழக்கவழக்கங்கள்.

1. அறைக்குள் வரும்பொழுதும் அறையைவிட்டு வெளிப்படும்பொழுதும் மற்றவர்களைக் கவனித்து மரியாதை செய்தல்.

2. வேண்டிய நேரங்களில் உத்தரவு கேட்பதிலும், வந்தனம் சொல்வதிலும், மன்னிப்பு கேட்பதிலும் தவறாதிருத்தல்.

3. மற்றவர்களைத் தொட்டுப் பிடிக்காமல் இருத்தல்.

4. மற்றப் பிள்ளைகளோடு சிநேகமாய் இருத்தல்.

5. எப்பொழுதும் மற்றப் பிள்ளைகளைக்குறித்துக் கோள் சொல்லாமலிருத்தல்.

6. வகுப்பில் முறைமுறையாகச் செய்யவேண்டிய காரியங்களில் ஒழுங்காய்த் தன் முறைக்குக் காத்துக்கொண்டிருத்தல்.

7. தனக்காக எப்பொழுதும் அதிகம்வேண்டும் அல்லது நேர்த்தியானது எனக்கு வேண்டும் என்று சொல்லாமல் இருத்தல்.

8. பள்ளிக்கூடச் சாமான்களிலும் சொந்த சாமான்களிலும் மற்றப் பிள்ளைகள் பங்கு பெறுவதற்கு இடம்கொடுத்தல்.

9. மற்றவர்களைக் கேலிபண்ணுமலும் தொந்தரவு செய்யாமலும் இருத்தல்.

10. சிறு பிள்ளைகளிடத்தில் பட்சம் காட்டுதல்.

11. விளையாட்டிலும் வேலையிலும் நியாயம் என்னவென்று காட்டுதல்.

12. இன்னொரு பிள்ளைக்கு ஒரு சாமான் முந்திக் கிடைத்தால் அதைப் பிடுங்காமல் இருத்தல்.

13. இன்னொரு பிள்ளையின் சொந்த சாமானைத் தொடாமல் இருத்தல்.

14. காணுமல்போன சாமான்களை யாருடையது என்று கண்டுபிடித்துக் கொடுத்தல்.

15. சண்டை செய்யாமல் இருத்தல்.

16. உபாத்தியாயரின் உதவியில்லாமல் தானே ஒரு சண்டையை நிறுத்துதல்.

17. மற்றவர்கள் பேசிக்கொண்டிருக்கும்பொழுது காத்துக்கொண்டிருந்து பிற்பாடு பேசுதல்.

18. பிள்ளைகள் கூட்டங்கூடித் தாங்களே ஏற்படுத்துகிற கட்டளைகளுக்குக் கீழ்ப்படிதல்.

19. பிள்ளைகள் கூட்டமாக ஏதோ செய்தால் அதிலே உதவியாய் இருத்தல்.

20. கஷ்டம் அல்லது நஷ்டம் வந்தாலும் மற்றவர்களுக்கு முன்பாக விசனத்தைக் காட்டாமல் இருத்தல்.

## மனத்துக்குரிய பழக்கவழக்கங்கள்.

1. யாரேனும் நேராய்ப் பேசும்பொழுது உடனே அவர்கள் சொல்லுகிறதை உணருதல்.

2. யாராவது எதையாகிலும் செய்யச்சொன்னால் உடனே அதைத் தப்பில்லாமல் செய்தல்.

3. ஒரு சின்னக் கதையை விளையாடிக் காட்டுதல்.

4. ஒரு சின்னக் கதையை நன்றாய்ச் சொல்லுதல்.

5. வேடிக்கையான காரியங்களில் சந்தோஷமாய்ச் சேருதல்.

6. வேண்டிய சமயத்தில் மாத்திரம் உபாத்தியாயரின் உதவியைக் கேட்டல்.

7. வகுப்பில் நல்ல ஒழுங்குகளைச் செய்வதற்கு உதவி செய்தல்.

8. ஒரு வேலையை முடித்தால் உடனே இன்னொரு பிரயோஜனமான வேலையைத் தேடுதல்.

9. தன் வேலையில் இருக்கிற குறைவுகளைத் தானே கவனித்துச் சரிப்படுத்தப் பிரயாசப்படுதல்.

10. கைகூடி வரவேண்டும் என்கிற நோக்கத்தோடு எல்லா வேலைகளையும் செய்தல்.

## கைவேலைக்குரிய பழக்கவழக்கங்கள்.

1. வரிசையாய் நிற்கவும் சாமான்களை வைக்கவும் வேண்டிய பொறுமை.

2. தண்ணீரைச் சிந்தாமல் தூக்கிக்கொண்டு போகும் சக்தி.

3. ப்ரஷ், வர்ண பென்சில், காகித பென்சில் எல்லாம் சரியாய் உபயோகிக்கப் படித்தல்.

4. கத்தரிக்கோலும் ஊசியும் சரியாய் உபயோகிக்கப் பழகுதல்.

5. சுத்தியலும், ரம்பமும், கத்தியும், ஆணியும்.

6. பிள்ளைகளையும், சாமான்களையும் சீக்கிரமாய் எண்ணிப் பார்ப்பது.

7. சாமான்களை அழகான ஒழுங்கின்படி வைக்கக்கூடிய சக்தி.

8. அளவு பார்க்கவேண்டிய சமயத்தில் திட்டமாய்ச் செய்யும் சக்தி.

இந்த அறுபத்திரண்டு பழக்கங்களையும் படித்துக்கொடுப்பது முடியாத காரியம் என்று உபாத்திமார் சொல்லுவார்கள்; ஆனால் இவைகளையெல்லாம் அனுபவத்தில் கொண்டு வருவதாயிருந்தால் எவ்வளவு பெரிய பொக்கிஷத்தைப் பிள்ளையின் பிற்கால ஜீவியத்திற்குச் சேர்த்து வைக்கிறவர்களாகிறோம். ஏனென்றால் சிறு வயதில் ஏற்படும் இந்த பழக்கங்கள் இலேசாய் மாறாமல் ஜீவிய காலமெல்லாம் இருக்குமன்றோ? 'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்.' ஒரு வழக்கம் சரியாய் ஏற்பட்டுவிட்டது என்று எப்படித் தெரியும் என்று ஒருவேளை சிலர் கேட்கலாம். ஒரு பிள்ளை முதல் இரண்டு வாரங்கள் மட்டும் சில பழக்கங்களைத் தவறாமல் செய்துகொண்டே வந்தால் அதன்பிறகு அந்தப் பழக்கங்களைக் குறித்து பயப்படவேண்டியதில்லை. ஆனால் உபாத்தியாயர் முதல் வாரத்தில் ஒரு வழக்கத்தைக்குறித்து ஒன்றுமே கவனியாதிருந்தால், அப்புறம் இரண்டாம் வாரத்தில் பிள்ளைகளிடம் ஏதாவது ஒன்றைச் செய்யச்சொன்னால் அவர்களுக்கு அந்த வழக்கம் சீக்கிரம் ஏற்படாது. அதைச் சரியாய் ஸ்தாபிக்க இரண்டு மூன்று மாதங்கள் செல்லும். பிள்ளைகள் வகுப்பு அறைக்குள் பிரவேசிக்கும்பொழுது அவர்களிடத்தில் இருக்கவேண்டிய அவ்வகுப்புக்குரிய பழ

க்க வழக்கங்கள் எவை என்று உபாத்தியாயர் முன்னமேயே யோசித்திருக்கவேண்டும். அப்படிச் செய்தால்தான் இந்த நோக்கம் நிறைவேறும்.

---

## V. சுயேச்சை

ஒரு சிறு குழந்தை வெகு சீக்கிரம் தன் விருப்பத்தைக் காட்டுகிறது என்று நமக்குத் தெரியும். தாய் தன் சமீபத்தில் இருந்தால் தனக்குச் சந்தோஷம் என்று அறிந்து உடனே அழுகிறது. ஒரு பொருளைத் தன் கையில் ஏந்தக்கூடிய திறமை உண்டானவுடனே தனக்கு வேண்டியதைக் கட்டாயமாய் அடைய முயலும். பிள்ளையின் சொந்த ஆசைதான் அதை மேற்கொள்ளுகிறது. வேறு கட்டளை, வேறு பிரமாணம் ஒன்றும் அதற்குத் தெரிகிறதில்லை.

பெற்றோர்களுக்கும் உபாத்திமாருக்கும் அடிக்கடி வருகிற யோசனை என்னவென்றால், எவ்வளவு தூரம் இந்தச் சுயேச்சை யென்னும் தன்மையைத் தானே பெலப்பட விட்டுவிடலாம் என்பதே. பெரியவர்கள் இது விஷயமாக இருவழிகளில் தவறிய பிற்பாடு கஷ்டப்படுகிறார்கள். சிலர் சுயேச்சை பாவத்தின் அடையாளம் என்றும், பிள்ளை யோசிக்காமல் பெரியவர்கள் சொல்லுகிறதையெல்லாம் உடனே சரியாய்ச் செய்தால் பூரணமான கீழ்ப்படிதல் ஏற்படும் என்று நினைத்து, ஆளும் திறமையை முழுபலத்தோடு பிள்ளையின்மீது உபயோகிக்கிறார்கள். அப்படிப்பட்ட குடும்பங்களிலும் வகுப்புக்களிலும் ஆச்சரியமான ஒழுங்கிருக்கும் என்று நினைத்து நாம் அந்த முறையை மெச்சிக்கொள்ளலாம். அப்படிச் செய்வதினால் பிள்ளையின் தன்மையில் என்ன நடந்திருக்கிறது என்று பார்ப்போம்? எந்தக் காரியத்தைக் குறித்தாவது தானாகவே யோசித்து, அது சரியோ இல்

லேயோ, அது உதவுமோ உதவாதோ என்று தீர்மானிக்கும் சக்தி ஏற்படாமற்போகிறது.

இந்த முறையின் பலாபலன் என்ன? பிள்ளைகளின் ஆசைகள் நல்லவைகளோ, கெட்டவைகளோ என்று விசாரிப்பதற்கு முன் பெரியவர்கள் அவைகளைத் தடுக்கிறார்கள்; பிள்ளைகள் தம் யோசனைகளை வெளியிடுவதற்குப் பயப்படும்படிச் செய்திருக்கிறார்கள்.

பிள்ளையின் தன்மையில் இரண்டு காரியங்கள் நடக்கலாம். பிள்ளை ஒரு காரியத்தைச் செய்வது அவசியமென்று கருதி அதை இரகசியமாகச்செய்ய முயலுமாதலால், அது நிச்சயமாய்க் கெட்ட காரியங்களுக்குள் பிரவேசிக்கும்; அல்லது, தடுக்கப்பட்டதினாலே, அதின் ஆசை வரவரக் குறைந்து போய்க் கடைசியாக எல்லாவற்றிலும் பிள்ளை தன் யோசனையை நம்பாமல் ஒரு யந்திரத்தைப்போல் பெரியவர்களுக்குக் கீழ்ப்படியும். தானே தனிமையாய் ஒரு தீர்மானத்தைச் செய்யவேண்டிய நாளில் சுய பெலன் ஒன்றுமில்லாமற் போகிறது; தீர்மானிக்கும் சக்தி குன்றிப்போகிறது. காற்றினால் அங்கும் இங்கும் அடிக்கப்படும் துரும்பைப்போல எந்த அற்ப யோசனைக்கும் இணங்கிப் பெலனற்றுப்போகும். பெற்றோர்கள் அறியாமையினால் தாங்களே இவ்வித நிலைமையைத் தம் பிள்ளைகளின் தன்மையில் எத்தனையோ சமயங்களில் உண்டாக்கியிருக்கிறார்கள். எல்லாத்தேசங்களிலும் போதகர்களின் பிள்ளைகள் மற்றெல்லாப்பிள்ளைகளைப் பார்க்கிலும் அதிகத் தொந்தரவு செய்வார்களென்னும் சொல் ஒன்று உண்டு. அது உண்மையாயிருந்தால் காரணம் இதுவே.

இன்னொரு முறை உண்டு. அதையும் பார்த்திருக்கிறோம். பிள்ளைகளைத் தடுப்பது அநியாயமென்றும், அதிகமாய் அன்பு காட்டவேண்டுமென்றும் நினைத்துச் சில பெரியவர்கள் பிள்ளைகளின் ஒவ்வொரு இஷ்டத்திற்கும் இசைந்து ஒரு காரியத்திலாவது அவர்களைத் தடுக்கமாட்டார்கள்.

அப்படிப்பட்ட பிள்ளைகள் தங்களுக்கு யோசிக்கும் சக்தி உண்டாவதற்குமுன் தங்களுடைய விருப்பம் ஒரு இராஜாவைப்போலத் தங்கள் முழு ஜீவியத்தையும் ஆள இடம் கொடுக்கிறார்கள். இந்த முறையும் அதிக மோசமாம்.

நாம் பிள்ளையின் தன்னயமான குணத்தைப் பலப்படுத்தியபின்பு அதைத் தன் தப்பிதங்களினால் ஏற்படும் கஷ்டமான ஜீவியத்திற்காளாக்குகிறோம். தன்னையும் மற்றவர்களையும் தொந்தரவுசெய்யப் பிள்ளையைப் பழக்குகிறோம். அப்படியானால் எவ்வளவு தூரம் மேற்கூறிய இரண்டு முறைகளும் பிரயோஜனமாயிருக்கும் என்று தெரிந்துகொள்ளுங்கள்.

யோசிக்கும் சக்தி விருத்தியாவதற்குப் பதிலாக அநேக உணர்ச்சிகள் வலிமையோடு தோன்றும். நாம் யோசிக்கும் சக்தியை இயற்கையாகவே முதிர விட்டுவிட்டு மற்றெல்லா நல்ல உணர்ச்சிகளையும் விர்த்திபண்ணவேண்டும். பிள்ளை எதின்மேல் பிரியப்படுகிறதென்பதும் எதின்மேல் பிரியப்படவில்லையென்பதும் முக்கியமான காரியங்கள் அல்ல என்று நாம் நினைக்கக்கூடாது. எந்த நல்ல ஆசை, எந்த நல்ல உணர்ச்சி வெளிப்படுகின்றதோ அதைத் திருப்தி செய்ய வேண்டும்.

அப்பொழுதுதான் மனம் நல்ல ஆசைகளினால் நிறைந்து கெட்ட ஆசைகளுக்கு இடங்கொடுக்காது. பிள்ளைகளை பொம்மைகளோடு திருப்தியாய் விளையாட விட்டுவிட்டால் அவர்கள் அடிக்கடி அதன்மூலமாய் இவ்வுணர்ச்சிகளைக் காட்டுகிறார்கள். ஒரு வீட்டில் ஒரு சிறு பெண் தன் தம்பியை அதிக பட்சத்தோடு தூக்கி விளையாடிப் பேசி அவன் அழாமலிருக்கப் பார்த்துக்கொண்டாள். தாய் இதைக் கவனித்து, 'மகளே, இதெல்லாம் இவ்வளவு நேர்த்தியாய்ச் செய்ய எங்கே படித்தாய்?' என்று கேட்டாள். பிள்ளை 'அம்மா, அப்படித்தான் வகுப்பு விளையாட்டிலே பொம்மையோடு பேசுகிறோம்' என்றாள்.

பிள்ளைகள் திரும்பத் திரும்பச் செய்ய முடியாத காரியங்களை அல்லது செய்யக்கூடாத காரியங்களைச் செய்ய மன்றுடுகிறுர்கள். அவர்கள் அவ்வாறு செய்வதற்கு நாம் உத்தரவு கொடுக்கக்கூடாது. ஆனுல் எத்தனை சமயங்களில் இல்லை என்கிற வார்த்தைக்குப் பதிலாகப் பிள்ளைகள் தங்களுக்கு மோசமில்லாமல் செய்யக்கூடிய காரியத்தைக் காட்டியிருக்கிறேம்? அப்படிச் செய்யாதே என்னும் வார்த்தைகள் நம் உதடுகளில் வரும் சமயத்தில் அதைத் தவிர்த்து 'வந்து இதைச்செய்' என்ற கட்டளை கொடுக்க நாம் பிரயாசப்பட்டால் அடிக்கடி பிள்ளைகளைத் தண்டிக்க அவ்வளவு அவசியமிராது. ஒரு பெட்டியில் விளையாட்டுச் சாமான்கள் பல இருந்தன. நாலைந்து பிள்ளைகள் இவைகளை எடுத்துக் கட்டைகளையும் பெட்டிகளையும் ஒருவர்மேலொருவர் எறிந்துகொண்டிருந்தார்கள். அதனுல் பிள்ளைகளுக்கும் சாமான்களுக்கும் அதிக மோசம் ஏற்படும். அங்கேயிருந்த உபாத்தினியம்மாள் பிள்ளைகளைக் கோபிக்காமல் பெட்டிக்குச் சமீபத்தில் வந்து அதைத் தலைகீழாகக்கவிழ்த்தி 'யார் இந்தச் சாமான்களைச் சரியாய் வைக்க எனக்கு உதவிசெய்யக்கூடும்?' என்று கேட்டவுடனே பிள்ளைகள் தங்கள் விளையாட்டை மறந்துவிட்டு வந்து உற்சாகத்தோடு அந்த வேலையைச் செய்து முடித்தார்கள்.

இதுவிஷயமாக நாம் மூன்று சட்டங்களைத் திரும்பத் திரும்ப நினைத்துக்கொள்வது அவசியம்.

1. கூடியவரைக்கும் பிள்ளையின் நோக்கம் நல்ல நோக்கம் என்று நம்பவேண்டும். சந்தேகமுள்ள எண்ணத்தோடு பிள்ளைகளைச் சந்தித்தால் அவர்களின் உள்ளான நோக்கத்தைக் கண்டுபிடிக்கமாட்டோம்.

2. ஒவ்வொரு பிள்ளைக்கும் தனித்தனி சுபாவம் உண்டு என்று அறியவேண்டும். எல்லோரையும் ஒரே மாதிரியாய் நடத்தலாம் என்று நினைக்கக்கூடாது.

**3.** பெரியவர்களுக்குச் சிறுவரின் செய்கைகள் எப்படித் தோன்றினாலும் பிள்ளைகளின் உள்ளான ஆவியும் நோக்கமுந் தான் விசேஷம். கட்டாயத்தினால் உண்டாகிற கீழ்ப்படிதல் நிலைநிற்காது. அன்பினால் உண்டாகிறதோ ஒருநாளும் அழியாது.

---

## VI. இரசிக்கும் தன்மையும் கவனிக்க முயற்சிப்பதும்

ஒரு சிறு பாலகனுக்கு எவ்வளவு தெரியும் என்று அறிய அடிக்கடி முயற்சிக்கிறோம். வெவ்வேறு விதமாய்ப் பிள்ளையின் கவனசக்தியை வளர்க்கப் பிரயாசப்படுகிறோம். பிரகாசமான பொருள்களைக் காண்பித்து ஆட்டுகிறோம். பிள்ளைகள் சத்தங்களினால் சந்தோஷப்படுகிறார்களோ, இல்லையோ என்று அறிய முயலுகிறோம். பிள்ளையினிடத்தில் காணப்படும் ஏதோ ஒரு அசைவினாலோ அதன் முகத்தில் ஏற்படும் மாறுதலினாலோ அதற்குக் கவனிக்கும் சக்தி உண்டு என்றறிந்து அதைக்குறித்துச் சந்தோஷத்தோடு மற்றவர்களிடம் சொல்லுகிறோம். ஒரு தாய்க்கு மிகவும் ஆனந்தமான உணர்ச்சி என்னவென்றால், என் பிள்ளை என்னைக் கவனிக்கிறது என்பதேயாம்.

இரசிக்கும் தன்மை அறிவுக்கு அஸ்திபாரம். எதை கவனிக்கிறோமோ அதைப் படித்து அறிவோம். ஆகையால் என்னென்ன காரியங்களைக் கவனிக்கத் தங்கள் பிள்ளைகளை வெகு சீக்கிரம் பழக்கலாம் என்று பெற்றோர்கள் யோசிப்பது அவசியம். நாம் எல்லோரும் அநேக காரியங்களில் குருடராயிருக்கிறோம். ஏனென்றால் நம்மைச் சுற்றியிருக்கிற அநேக அழகான காட்சிகளை நாடோறும் கவனிக்காமலிருக்கிறோம். ஆகாயத்தில் அசைகிற சத்தங்கள் காதுக

ளுக்குக் கேட்கிறதேயில்லை என்று மனிதர் கண்டுபிடித்து, இப்பொழுது வருஷந்தோறும் புதிய புதிய யந்திரங்களின் மூலமாய் அதிக தூரத்திலிருந்து வருகிற சத்தங்களை உற்றுக் கேட்கிறார்கள். பிள்ளைகள் தங்கள் வீட்டில் நிறமுள்ளவை களையும், அசைகின்றவைகளையும் அதிகமாய்க் கவனிக்கிறார் கள். இது அவர்களின் இயற்கை என்று நினைத்துக்கொண்டு, அவர்களை அதிகமாய்க் கவனிக்க விட்டுவிட்டால் மாத்திரம் போதாது. அவர்களைப் பழக்குவதும் அவசியம். குழந்தை கள் படுத்திருக்கும் இடத்திற்குச் சமீபமாய்ப் பிரகாசமுள்ள கண்ணாடிகள், இரசகுண்டுகள், வர்ணக் கிளிகள், பந்து முதலி யன போன்ற அசையக்கூடிய பல பொருள்களைத் தொங்க விட்டால் அவர்கள் அதிகநேரம் அவற்றைக் கவனித்துக் கொண்டேயிருப்பார்கள். பெற்றோரைத் தொந்தரவு செய்ய மாட்டார்கள்.

இதன்பிறகுக் கொஞ்சக்காலம் ஆனதும் பிள்ளை வாயினால் கவனிக்க ஆசைப்படுகிறது என்று சொல்லலாம். அது ஒவ் வொன்றையும் வாயில் வைத்துச் சோதித்துப் பார்க்கும். இப்பழக்கம் குழந்தையின் சுகத்துக்குக் கேடாகும். ஆனால் அடிக்கடி லேசாய்க் கழுவக்கூடிய சாமான்களைப் பிள்ளைக ளுக்குக் கொடுத்தால் கவனிக்கும் சக்தி சீக்கிரம் வேறொரு விதமாய் மாறியிருக்கக் காணலாம். தாமாகவே பேசும் வரைக்கும் பிள்ளைகளுக்கு முன்பாக எதையும் பேசலாம், எதையும் செய்யலாம் என்று பல பெற்றோர்கள் நினைக்கிறார் கள். பிள்ளைகள் முதலில் எதையும் வெகு கவனமாக உற் றுப் பார்த்துக் கேட்டு யோசித்து முடிவில் பேச்சின் மூல மாய்த் தங்கள் யோசனைகளை வெளியிடப் போகிறார்கள். பார்க்கும் சக்தியும், கேட்கும் சக்தியும் மிகவும் நுட்பமா னவை என்பதைப் பெரியவர்கள் அடிக்கடி மறந்துபோகிறார் கள். விளையாட்டிலே சிறுவர்கள் தம் பெற்றோர்களின் தோற்றத்தையும், அவர்களுடைய சத்தத்தையும் பாவனை

களையும் மிகவும் வேடிக்கையாக நடித்துக் காட்டுவார்கள். சிறுவர்கள் வெகு சீக்கிரம் பெரியவர்களுடைய வெளிவேஷத்தைக் கண்டறிந்து தாங்களும் அதைச் செய்வார்கள்; அல்லது பெரியவர்களிடம் வைத்த நம்பிக்கையை விட்டுவிடுவார்கள்.

பிள்ளைகள் வகுப்புக்கு வரும்பொழுது உபாத்தியாயர் செய்யவேண்டிய இரண்டு கடமைகள் உண்டு. வீட்டில் பெற்றோர்கள் செய்திருந்ததைப்போலப் பல நற்காரியங்களைக் கவனிக்கப் பிள்ளைகளைப் பழக்குவது அவசியம். அதோடு ஒரே காரியத்தை வெகுநேரம் கவனிக்கச் செய்து அற்பக் கஷ்டத்தோடு அதைக்குறித்து யோசிக்கச் செய்வது அவசியம். இந்த இரண்டாவது கடமையைச் செய்வதில்தான் அநேக உபாத்தியாயர்கள் தவறிப்போகிறார்கள். அதனால் சிலர் கிண்டர்கார்ட்டன் முறையைப்பற்றிச் சந்தேகப்படும்படி நேரிடுகிறது. பிள்ளைகள் கிண்டர்கார்ட்டன் வகுப்பைவிட்டு அடுத்த வகுப்புக்கு வரும்பொழுது கஷ்டமான ஒரு பாடத்தை யோசிக்கவேண்டிய சமயத்தில் அதை மேற்கொள்ள முடியாது என்று சிலர் முறுமுறுக்கிறார்கள். இது உண்மையா என்று பார்க்கும்பொழுது அந்த வகுப்புக்களை நடத்துகிறவர்கள் ஒரு விசேஷித்த காரியத்தைப்பற்றிக் கவலைப்படுகிறதேயில்லை என்று தெரிகிறது.

இந்தச் சக்தியைப் பிள்ளைகளிடத்தில் பலப்படுத்தும்படி எல்லா உபாத்திமார்களும் கையாடவேண்டிய சில பொதுவான சட்டங்களை யோசித்துப் பார்ப்போமாக.

1. பிள்ளைகள் எதையும் கவனிக்கிறார்களோ இல்லையோ என்று அறியவேண்டும். பிள்ளைகள் கவனம் செலுத்தும் வரைக்கும் எந்தக் கதையையும் எந்தப் பாடத்தையும் தொடங்க அவசியம் இல்லை. சில உபாத்திமார்கள் குருடரைப்போலப் படிப்பிக்கிறார்கள். பிள்ளைகள் கொஞ்சங்கூட கவனிக்காமல் விளையாடிக்கொண்டேயிருந்தாலும் உபாத்தி

மார்களுக்குக் கவனிக்கும் சக்தி இல்லாததினாலே பிள்ளைகள் செய்கிறதொன்றும் தெரிகிறதில்லை.

2. 'இங்கே கவனியுங்கள். எல்லாரும் என்னைக் கவனிக்கவேண்டும். கைகட்டி வாய்மூடிக் கவனமாய் இருங்கள்' என்று சொல்லுகிற கட்டளைகளினாலே பிரயோஜனம் ஒன்றும் இல்லை. உபாத்தியாயர் தனக்கும் பிள்ளைகளுக்கும் ஒரு சம்பந்தத்தை ஸ்தாபிக்கவேண்டும். இதைச் செய்யும் பொருட்டு உபாத்தியாயர் ஒவ்வொரு பிள்ளையையும் நன்றாய் அறிந்து அவர்களில் என்னென்ன யோசனைகளும், அநுபவங்களும் உண்டு என்று முதலில் அறிந்திருக்கவேண்டும். அப்பொழுது ஏதோ ஒரு அசைவினாலாவது பிள்ளைகளின் கவனத்தை உண்டாக்கிக்கொண்டிருக்கலாம்.

3. யாவருக்கும் எந்த வயதிலும் இரகசியங்களைக் கண்டு பிடிக்க வெகு ஆசை உண்டு. பெரியவர்களிடத்தில் காணப்படும் அறிவு சிறுவர்களுக்கு இரகசியம்போல் தோன்றுகிறது. நாம் பலபொழுதும் இந்த உண்மையை மறந்து போகிறோம். பிள்ளைகளுக்குச் சொல்லப்போகிற காரியங்களை ஏதோ ஆச்சரியமான இரகசியங்களை வெளியிடப் போகிறவர்கள் போலச் சொல்லிக்காட்டினால் பிள்ளைகள் இன்னும் அதிகமாய்க் கேட்க ஆசைப்படுவார்கள். நமக்குள் இரகசியங்களைக் கண்டுபிடிக்கவேண்டும் என்னும் குணம் எப்பொழுதும் இருந்தால், பிள்ளைகள் நம்மிடம்வந்து எதையாவது சொல்லவோ, காட்டவோ பிரயாசப்படும்பொழுது நாம் பொறுமையாய் அவர்கள் சொல்வதை ஏற்றுக்கொண்டு ஒருவேளை இந்தச் சிறுவரின் மூலமாய் சத்தியத்தை அறியலாம் என்ற தாழ்மையான யோசனையோடு எப்பொழுதும் இருக்கவேண்டும்.

கவனிக்கும் சக்தியோடு மிகவும் சம்பந்தப்பட்ட காரியம் என்னவெனில் முயற்சியேயாம். எதைப் பிரியப்படுகிறோமோ அதை கவனிக்கிறோம். எதைச் செய்ய பிரயாசப்படு

கிறோமோ அதைக் கவனிக்கிறோம். முயற்சி தோன்றுகிற இடத்தில் மட்டுமே கவனிக்கும் சக்தியும் ஏற்படுகின்றது என்று சிலர் சொல்லுகிறார்கள். இது உண்மையோ என்று பார்க்கும்பொழுது, பிள்ளைகளை அடிக்கடி கட்டாயப்படுத்திக் கவனிக்கச் செய்கிற உபாத்திமார்களுடைய முயற்சி வீணாய்ப் போகிறது என்று தெரிகிறது. ஏனென்றால் எத்தனையோ பாடங்களில் உபாத்தியாயர் வெகு கஷ்டத்தோடு பிள்ளைகளுக்குக் காண்பிக்கக்கூடிய பொருட்களைச் சேகரித்துக்கொண்டு வந்திருந்தாலும், பிள்ளைகள் தாமாகவே முயற்சிக்கக்கூடிய அப்பியாசம் ஏதொன்றும் இல்லையாகையால் கவனிக்கும் சக்தியும் பலப்படுகிறதில்லை. இதற்கு எதிரிடையான ஒரு காரியமும் உண்டு. நாம் ஒன்றைக் கவனிக்காவிட்டால் அதை ஒட்டின அப்பியாசத்தைக் கவனிக்கமாட்டோம். ஆகையால் கவனிக்கும் சக்தியைப் பலப்படுத்துகிற சமயத்திலே, அதோடுகூட, பிள்ளை தன் முழுமனதோடு இதையும் அதையும் செய்யப் பிரயாசப்பட்டுத் தன்னுடைய முயற்சி எவ்வளவு என்று சோதிக்கவும் பழக்க வேண்டும்.

இதிலும் ஒரு தீமை இருக்கின்றது. அநேக குடும்பங்களிலும் வகுப்புக்களிலும் பெரியவர்கள் பிள்ளைகளை உற்சாகப்படுத்தவேண்டும் என்று நினைத்து முழுநேரமும் பிள்ளைகளை அங்கும் இங்கும் ஒட்டி அதையும் இதையும் கவனிக்கச் செய்து, அவர்களுடைய தேகபலத்தைக் குறைக்கக்கூடிய ஒரு எழுப்புதல் உண்டாக்குகிறார்கள். இதன்மூலமாய் நன்றாய் யோசித்து முயற்சிகளைக் கவலையாய் முடிக்கக்கூடிய குணங்களைப் பிள்ளைகளிடத்தில் ஸ்தாபிக்காமல் கவலையீனமாய்க் கஷ்டம் வந்தவுடனே ஒரு காரியத்தை விட்டுவிட்டு இன்னொரு சந்தோஷமான காரியத்துக்கு ஓடிப்போகப் பிள்ளைகளைப் பழக்குகிறார்கள்.

கவனிக்கும் சக்தியை மூன்றுவிதமாய்ப் பிரிக்கலாம்.

1. நமக்குள் இருக்கும் உணர்ச்சிகளினால் கவனிக்கிறோம். பிள்ளை வெறும் சந்தோஷத்தினால் ஓடுவதும், ஆடுவதும், குதிப்பதும், சுற்றுவதும் எப்படி என்று கவனித்துச் செய்கிறது.

2. ஏதோ ஒரு பொருளைக் கவனிக்கிறோம். படம் பிடிக்கிற ஆள், தன் வேலைக்கு வேண்டிய பெட்டிகளை உடனே கவனித்துப்பார்ப்பான். வியாபாரி தன் கடைக்குப் பிரயோஜனமாய் இருக்கும் பொருட்களைக் கவனிப்பான். அப்பொழுது பொருட்களின் மூலமாய்ப் புது ஆசைகள் உண்டாகி, இன்னும் இருக்கும் பொருட்களை மேலும் அதிக கவனத்தோடும் முயற்சியோடும் தேடிப்பார்ப்பான்.

3. நாம் நமக்குள் இருக்கும் உணர்ச்சிகளைக் கவனித்துப் பிரியமாய் இருக்கிறதைத் திரும்பவும் உண்டாக்கக்கூடிய வழியைக் கவனித்துப் பார்க்கிறோம். பிள்ளைகள் ஏன் ஒரு பயங்கரமான கதையைத் திரும்பத் திரும்பக் கேட்கவேண்டும் என்று சொல்லுகிறார்கள். அதைக் கேட்டுக்கொண்டேயிருக்கும்பொழுது மனத்துள் ஒருவிதமான எழுப்புதல் உண்டாகிறது. இந்த எழுப்புதலான உணர்ச்சி பிரியமேயாம். அதேவிதமான எழுப்புதல் நேர்த்தியான இராகங்களினாலும், கண்ணுக்கு அருமையான காட்சிகளினாலும், கைசாமர்த்தியத்தினாலும் உண்டாகக்கூடும்.

இன்னும் ஒருவிதமாய் இந்தச் சக்தியைப் பிரிக்கலாம். சில சமயங்களில் பிள்ளைகள் நேராய்ப்போய் ஏதோ சில விளையாட்டுச் சாமான்களை எடுத்து, முழுமனதோடு அவைகளைக் கவனித்து விளையாடிக்கொண்டிருப்பார்கள். ஆனால் வரவர, ஒரு காரியத்தைச் செய்துகொண்டேயிருக்கும் பொழுது இன்னொரு நோக்கம் மனதில் இருக்கிறதினாலே தான் அதைச் செய்கிறார்கள். ஒரு தகப்பன் தன் வீட்டை

யும், பெண்சாதியையும், பிள்ளைகளையும் நினைத்து அவர்கள் மேல் இருக்கும் கவலையினாலே கஷ்டமான வேலைகளைச் செய்வான். மற்றப்படி ஒருவேளை அவ்விதமான வேலையைக் கவனிக்கவேமாட்டான். ஒரு பையன் நாலுமணிக்கு மற்றப் பையன்களோடு விளையாட்டிலே சேரச் சீக்கிரம் போக வேண்டும் என்று நினைத்து அதற்காக உபாத்தியாயர் சொல்லுகிற பாடங்களைத் துரிதமாய்ப் படிக்கப் பிரயாசப்படுவான்.

இந்த விஷயத்தைப்பற்றி நாம் கேட்கவேண்டிய இன்னொரு கேள்வி என்னவென்றால், எவ்வளவு நேரம் ஒரே காரியத்தைக் கவனிக்கக்கூடும்? சிறு பிள்ளை கட்டைகளை வைத்து ஒரு கோபுரத்தைக் கட்டுகிறான். அவனுடைய நோக்கம் என்னவென்றால், அந்தக் கட்டைகள் விழும்வரைக்கும் கூடியமட்டும் உயரமாய்க் கட்டலாம் என்பதே. ஐந்து அல்லது பத்து நிமிஷம்மாத்திரம் இந்த ஒரே காரியத்தைக் கவனிக்கிறான். வரவர இன்னொரு யோசனை ஏற்படுகிறது. ஒரு ஸ்டேஷன் கட்டலாம் என்று யோசிக்கிறான். அப்பொழுது ஸ்டேஷன் கட்டி, வெவ்வேறு விதமான வண்டிகளை எப்படிக் கட்டலாம் என்று யோசிக்கிறான். இப்படியாக ஒரே நோக்கத்தோடு கவனிக்கும் சக்தியை இன்னும் அதிக நேரம் ஒரே வழியில் உபயோகிக்கப் பழகுகிறான். இப்பொழுது பள்ளிக்கூடங்களில் உபயோகிக்கப்படுகிற முயற்சி முறைக்கு இதுதான் காரணம்.

இந்த முறையில் நாலு விசேஷித்த படிகள் உண்டு.

1. யோசித்தல் :—எதைச் செய்யலாம்?

2. வழி வகையைக்குறித்தல் :—எப்படிச் செய்யலாம்?

3. நிறைவேற்றுதல் :—நான் செய்திருக்கிறதைப் பார் என்று பிள்ளைகள் சொல்லுவார்கள்.

4. தீர்மானித்தல் :—நான் செய்தது நல்லதோ இல்லையோ என்று கேட்பார்கள்.

# VII. இயற்கையான உணர்ச்சிகள்

இரண்டாவது அதிகாரத்தில் இயற்கையான குணங்களினுல் பிள்ளை ஏதாவது ஒரு வழியாகத் தனக்குத் திருப்தியானதைத் தேடிக்கொள்ளுகிறது என்று பார்த்தோம். ஆனுல் திருப்தி கிடைக்காவிட்டாலோ அப்பொழுது என்னவாகும்? பிள்ளைக்குக் கோபமோ, விசனமோ, பொருமையோ, பயமோ, வெறுப்போ, பரிதாபமோ, ஏதாவது ஒன்று உண்டாகலாம். பிள்ளைக்குத் திருப்தி ஏற்படும்பொழுதோ என்னவாகும்? சந்தோஷம், பட்சம், அன்பு, இரக்கம், பெருமை முதலிய குணங்கள் எல்லாம் தெரியும். இவ்விதமான எழுப்புதலை இயற்கையான உணர்ச்சி என்று சொல்லுகிருேம். இந்தக்குணத்திற்கும் இதற்குமுன் படித்த இயற்கையான குணங்களுக்கும் அதிக சம்பந்தம் உண்டு. ஆனுல் அவைகளை எப்படி நடத்தவேண்டும் என்று யோசிப்பது மிகவும் பிரயோஜனமாயிருக்கும். சிறு வயதில் இந்த உணர்ச்சிகள் அதிகத் தெளிவாய்ப் பிள்ளைகளிடத்தில் வெளிப்படும்; எனினும் வெகுசீக்கிரம் மாறிப்போகும். ஒரு நேரம் சிரித்துக்கொண்டிருக்கும் பிள்ளை மறுநிமிஷத்தில் தனக்கு வேண்டியதொன்று கிடைக்காவிட்டால், உடனே அழுது அடித்துக் கோபம்கொள்ளும். அப்படியானுல் நாம் இந்த உணர்ச்சிகளைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்ருல், அவைகள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பிரயோஜனம் உண்டு என்பதே. அதோடு கூட ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தீமையும் உண்டு. தேக இச்சைகளையும் மன ஆசைகளையும் சரியாய் அடக்கிக்கொள்ளும் திறமையுள்ள பிள்ளை இந்த உணர்ச்சிகளையும் அடக்கிக்கொள்ளக் கூடுமானுல், அப்பொழுது அப்பிள்ளை தேக விஷயங்களிலும் மன விஷயங்களிலும் சுகமாய் இருக்கிறது என்று சொல்லலாம்.

இந்த உணர்ச்சிகளினுலே முயற்சி உண்டாகும். நாம் ஒரு வேலையைச் செய்துமுடித்ததும் சந்தோஷப்படுகிறோம். திரும்பவும் அதே வேலையை முன்னிலும் அதிக சீக்கிரமாகவும், வெகு நேர்த்தியாகவும் செய்யப் பிரயாசப்படுகிறோம். அப்படியே ஏதோ ஒரு கடமையை நிறைவேற்றும் பொருட்டுக் கோபம் உண்டானுலும் ஒருவேளை அதை மாற்றப் பிரயாசப்படுவோம். இரக்கப்படும்பொழுது நியாயம் செய்யப் பிரயாசப்படுகிறோம். ஆகையால் நாம் எப்பொழுதும் அந்த உணர்ச்சிகளை மேலான நோக்கமுடைய நிலைகளுக்கு உயர்த்தப் பிரயாசப்படவேண்டும். பிள்ளைகளிடத்தில் பொறுமை என்னும் குணம் இருந்தாலும் பிள்ளை அக்குணத்தைத் தனக்காக உபயோகிக்காமல் மற்றவர்களுக்கு நன்மை உண்டாகும்படி உபயோகிக்கப் பெரிதும் ஆசைகொள்ளக் கற்பிக்கவேண்டும். வேறொரு பிள்ளை ஏதோ ஒரு பாடத்தில் தேர்ச்சிப் பெற்றிருப்பதைக் கண்டு சந்தோஷப்படப் பிள்ளைகளைப் பழக்கவேண்டும். இரக்கம், பட்சம், அன்பு முதலிய குணங்களை மனவிஷயங்களிலும் உபயோகிக்கப் பிள்ளைகளுக்கு இடம் கொடுக்கவேண்டும். வகுப்பில் புதிதாய் வந்து சேருகிற பிள்ளைகளுக்கு எப்படிப்பட்ட உதவி அவசியம் என்று பிள்ளைகளை யோசிக்கச் செய்யலாம். தண்டனையினுலே வெட்கப்படுகிற பிள்ளை எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதை யோசிக்கச் செய்யலாம். தெரிந்தவர்களுக்குச் செய்யும் உதவி முதலானவைபோன்ற காரியங்களைத் தெரியாதவர்களுக்கும் செய்யப் பழக்கவேண்டும்.

## கோபம்.

இந்தக் குணம் சில சமயங்களில் ஒரு பயங்கர வியாதியைப்போல் இருக்கலாம். அதை அடக்கமுடியாத பிள்ளை கோபம்வரும் சமயத்தில் தான் செய்கிறதென்னவென்று அறியாமல் இருக்கும். என்றுலும் பிள்ளைக்குத் தன்

கோபத்தைப் பெரியவர்கள் எல்லாரும் கவனிக்கிறார்கள் என்று தெரிகிறது. அதனால் பிள்ளை ஒரு விதத்தில் திருப்தி அடைகிறது. ஒரு பிள்ளை தன்னைப் போதுமானபடி மற்ற வர்கள் கவனிக்கிறதில்லை என்று கண்டு, ஏதாவது ஒரு சிறு காரியத்தை ஒட்டிக் கோபங்காட்டி மிகவும் தொந்தரவு செய்யப் பிரயாசப்படுகிறது. இந்தத் தீமையான குணத்தை நீக்கப் பழக்குவது கஷ்டம். சில பிள்ளைகள், தங்களுடைய கோபத்தினால் தங்களுக்குச் சந்தோஷம் வருவதில்லை என்றும், ஆனால் நஷ்டமே வருமென்றும் வரவரத் தாமாகவே கற்றுக்கொள்ளுகிறார்கள். சில பிள்ளைகளுக்குக் கோபம் வரும்பொழுது கஷ்டமான சரீர அப்பியாசத்தைக் கொடுத்தால் அப்பொழுது அவர்களுடைய கோபம் குறைந்து போகும். தமக்கு அன்பானவர்கள் கோபம்கொள்ளும் பொழுது அதை எப்படி அடக்கிக்கொண்டு சாந்தமாய் நடக்கிறார்கள் என்பதைப் பிள்ளைகள் கவனித்துப் படிக்கிறார்கள்.

கோபம் காட்டுகிற சமயத்தில் சில சிரிப்பான வேடிக்கைகள் உண்டு என்று காட்டினால் ஒருவேளை கோபம் குறையலாம். கோபம் காட்டினால் கோபம்வரும் என்று நினைக்கிறோம். அதனாலேதான் எதிரி கோபமில்லாமல் மெதுவாய் மறுமொழி சொன்னால் நாம் ஆச்சரியமடைந்து கோபத்தை விட்டுவிடுகிறோம். ஒரு வீட்டில் ஒரு பிள்ளை தனக்குக் கோபம்வரும் பொழுதெல்லாம் பைத்தியகாரனைப் போலத் தரையில் விழுந்து, காலால் உதைத்துப் பல்லைக் கடித்துக் கொண்டேயிருந்தது. தகப்பன் திடீரென்று வந்து பிள்ளையைத் தூக்கி ஒரு உயரமான தட்டின் (Shelf) மேலே உட்காரவைத்தான். அப்பொழுது அந்தப் பிள்ளை அங்கிருந்து கொண்டு அப்படியும் இப்படியும் கொஞ்சம் அசைந்து ஆடினாலும் உதைத்தாலும் விழுந்துவிடுவோம் என்று தெரிந்துகொண்டது. பிள்ளை தனக்கு வரும் மோசத்தைத் தெரிந்துகொள்ளும் என்று தகப்பன் யோசித்து அதை

அங்கேயே விட்டுவிட்டான். உடனே பிள்ளையின் அழுகைச் சத்தம் நின்றுவிட்டது. 'தயவுசெய்து என்னைக் கீழே தூக்கிவிடுங்கள்' என்று கேட்டவுடனே, சந்தோஷத்தோடு தகப்பன் வந்து பிள்ளையைக் கோபிக்காமல் எடுத்துக் கீழே விட்டுவிட்டான். வேறு சிலர் கோபம்கொண்டு முரட்டாட்டமாய் இருக்கும் பிள்ளையின் தலைமேலே திடீரென்று தண்ணீரை ஊற்றுவார்கள். குளிரினாலே உடம்பில் ஏற்பட்ட இரத்தவெழுச்சி கொஞ்சங் குறையும். அது குறைந்தவுடனே கோபமும் குறையும். கோபங்கொண்டு முரட்டாட்டமாய் இருக்கும் பிள்ளைகளைக் குணப்படுத்துவதில் ஒரு விசேஷித்த காரியம் உண்டு. ஒரு வைத்தியர் வியாதிக்காரரை நடத்துவதுபோலவே நாம் கோபமுள்ள பிள்ளையை நடத்தவேண்டும். கோபத்தோடு கோபங்கொண்ட பிள்ளையைத் தண்டித்தால் பிள்ளைக்குத் தண்டனையின் காரணம் எப்படித் தெரியும்? அநேக பிள்ளைகளுக்குக் கோபத்தினால் என்ன பிரயோஜனம் உண்டாகும் என்று கேட்கலாம். கோபத்தை அடக்குவது கஷ்டம். என்றாலும் ரயில் வண்டியை ஓட்டுகிறவன் நீராவியை அடக்கி அதைக்கொண்டே யந்திரத்தை ஓட்டுவதுபோலக் கோபம் என்னும் குணத்தை அடக்கி போதுமான ஞானத்தை உபயோகிக்கப் பழகவேண்டும் என்று நாம் பிள்ளைகளுக்குக் காட்டக்கூடுமானால், அவர்கள் அந்நோக்கத்தை அடையப் பிரயாசப்படுவார்கள்.

## பயம்.

பயம் என்னும் குணம் மனிதர் புகழத்தக்க ஒரு குணமன்று. அப்படியிருந்தாலும் அது இயற்கையானதென்று பார்க்கிறோம். பயத்தின் அகோரத்தினால் ஒரு மனிதனுடைய முழு ஆத்மாவும் அழிந்துபோகக்கூடும். அதை நீக்கவேண்டுமென்று நினைத்தாலும் அதின் பிரயோசனத்தை

முதலாவது நினைக்கவேண்டும். ஏனென்றால் நோக்கமில்லாமல் கடவுள் இக்குணத்தைக் கொடுத்திருக்கமாட்டார்.

நாம் சிறு பிள்ளைகளை அதிகமாய்க் கவனித்துக்கொண்டிருந்தால், பயந்தான் கவனிக்கும் சக்திக்குக் காரணம் என்று கண்டுகொள்வோம். பிள்ளைகள் சிறு பிராயத்தில் அடிக்கடி அவசியமில்லாமல் பயப்படுகிறார்கள். ஆனால் அந்த பயத்தினால் வெவ்வேறு காரியங்களைக் கவனித்து வரவர எது மோசம், எது மோசமல்ல என்று யோசித்துக் கவனிக்கிறார்கள். மனிதருக்குப் பயமில்லாவிட்டால் அவர்கள் அநேக காரியங்களை மூடத்தனமாய்ச் செய்து தங்களுடைய சக்திகளை வீணாய்க் கெடுத்துவிடுவார்கள்.

இதினாலேதான் மிருகங்களுக்கும் மனிதருக்கும் இந்த இயற்கையான சக்தி ஏற்பட்டிருக்கின்றது. ஒரு குதிரை வயலில் மேய்ந்துகொண்டிருக்கையில் திடீரென்று புகை வண்டி சமீபத்தில் ஓடினால் குதிரை சத்தத்தைக் கேட்டு பயந்து ஓடிப்போகும். அக்குதிரை தொடர்ச்சியாய் இரண்டு மூன்று நாட்களாக அப்படிச்செய்தபிற்பாடு அதனால் தனக்கு மோசமில்லை என்று கண்டு அதைக்குறித்துக் கவனிக்காமலிருந்தது.

பிள்ளை முதலாவது புகைவண்டியில் பிரயாணம்பண்ணும் பொழுது அதிகமாய்ப் பயப்படும். ஆனால் வரவர புகைவண்டியைக் கவனித்து ஆச்சரியப்பட்டு அதைப்பற்றி இன்னும் விசாரிக்க ஆசைப்பட்டு ஒரு வேளை வயதானபிறகு அதை ஓட்டப் படிக்கவும் கூடும். இந்த விஷயத்தில்தான் மனிதருடைய சக்திக்கும் மிருகங்களின் சக்திக்கும் உள்ள வித்தியாசம் தெரியும். குதிரைக்குப் பயம் நீங்கினவுடனே அது வேறு யோசனை உண்டாகிறதில்லை. பிள்ளைக்குப் பயம் குறைந்தால் ஆச்சரியமும், விசாரிக்கும் ஆசையும், யோசனையும் பின்பற்றி வரும். பயம் என்னும் விஷயத்தில் பெரியவர்கள் சில சமயங்களில் தெரிந்தும் சில சமயங்களில்

தெரியாமலும் பிள்ளைகளுக்குப் பெருந்தீங்கு விளைவிக்கிறார்கள். சத்தங்களினாலும் நூதனக் காட்சிகளினாலும் பிள்ளைகள் பயத்தைக் காட்டினால் பெரியவர்கள் அடிக்கடி சிரிக்கிறார்கள். ஆனால் பயத்திற்கு ஒரு காரணமுமில்லையென்று அன்பாகச் சம்பாஷித்து விளக்கினால் பிள்ளைகள் சிறுவயதிலேயே பயத்திற்குக் காரணம் உண்டோ இல்லையோ என்று தேடப் பழகுவார்கள்.

அநேகர் இருட்டில் இயற்கையான பயம் உண்டு என்று நினைக்கிறார்கள். ஆனால் அது அடிக்கடி பெரியவர்களின் சம்பாஷணையினால் மாத்திரம் உண்டாகும். சிலர் சிறுவர்களைப் பயமுறுத்துவது ஒருவிதப் பரிகாரம் என்று நினைக்கிறார்கள். அத்தகையவரின் கவலையீனத்தினால் பிள்ளைகள் அவசியமில்லாமல் பயப்பட்டு அநேக வருஷங்களாக அதை நீக்கக் கஷ்டப்படுகிறார்கள். பிள்ளைகளைத் தண்டிக்கும்படியாகவும் அவர்களைப் பயமுறுத்தும்படியாகவும் பொய்யான காரியங்களைச் சொல்வது பெரிய பாவம். பிள்ளையைத் தண்டிக்கும்படியாகச் சில சமயங்களில் தனிமையாய் ஒரு அறையில் விட்டுவிடுவது அவசியம். ஆனால் இருட்டான அறையில் வைப்பது அநியாயம்; சுகத்திற்கும் மோசம். ஒரு தாய் தன் பிள்ளையைச் சிறு வயதுமுதல் இரவுதோறும் இருட்டில் படுக்க விட்டுவிட்டால் அந்தப் பிள்ளைக்குச் சற்றென்கிலும் பயமிராது. ஏனென்றால் அந்தத் தாய் அதிக ஞானத்தோடு அந்தப் பிள்ளையினிடம் பேசி, இருட்டிலும் வெளிச்சத்திலும் எல்லாம் ஒன்றுபோலவேயிருக்கிறது என்றும், இருட்டில் இளைப்பாறுதல் சௌகரியம் என்றும் காண்பிக்கிறாள்; பிள்ளை ஏதோ ஒரு சத்தத்தைக் கேட்டால் உடனே அதைத் தானே விசாரிக்கட்டும் என்று விட்டுவிடுகிறாள். அப்படியே பிள்ளை பழகி சந்தோஷத்தோடு தூங்குகிறது.

பிள்ளைகள் வகுப்பிற்கு வரும்பொழுது பலவகையான பயங்களுடையவராயிருக்கிறார்கள். உபாத்தியாயர் அதிக

கவலையோடு அவற்றைக் கவனிக்கவேண்டும். ஏனென்றால் சில பிள்ளைகள் மற்றவர்கள் தங்களைக் கவனித்தால் பயப்பட்டு ஒன்றும் செய்யமாட்டார்கள். உபாத்தியாயர் கேலி பண்ணுவதைப்பற்றி எச்சரிக்கையாயிருக்கவேண்டும். பிள்ளைகளுக்குள் இருக்கிற வித்தியாசங்கள் அவர்களுக்குத் தெரியும்பொழுது சிலர் தரித்திரத்தினால் மிகவும் பயப்படுகிறார்கள். சிலருக்கு இயற்கைச் சுபாவமான பயங்கள் உண்டு. இவைகள் சிறு பிராயத்தில் நடந்த காரியங்களினாலே அல்லது முன்னோருக்கு நடந்த காரியங்களினாலே உண்டாகின்றன.

இப்படிப்பட்ட வெவ்வேறு பயங்கள் ஒரு பிள்ளையினிடத்தில் காணப்பட்டால் நாம் என்ன செய்யவேண்டும்? உடனே பிள்ளை தன் சுயபலத்தால் ஒரு பயத்தை அடக்கிக்கொள்ளக் கூடும் என்று நினைக்கக்கூடாது. ஆனால் அந்த நோக்கத்தைத் தெரிவித்து வெவ்வேறு ஏற்பாடுகளினாலே பிள்ளைக்கு உதவிசெய்யப் பிரயாசப்படவேண்டும்.

மிருகங்களினால் பிள்ளைகளுக்குப் பயமானால் வீட்டில் மிருகங்களை வளர்ப்பது அதிகப் பிரயோசனமாயிருக்கும். கிண்டர்கார்ட்டன் விளையாட்டுக்களில் பிள்ளைகள் தங்களைப் பற்றிய பயங்களை மறந்துபோகிறார்கள். உபாத்தியாயரும் தாயும் தங்கள் மாதிரியினால் இந்த விஷயத்தில் அதிக நன்மை செய்யக்கூடும். வரவரக் கதைகளின்மூலமாய்ப் பிள்ளைகளுக்கு பயங்காட்டாமல் தைரியத்தைக் காட்டப் பழக்குகிறோம். விசேஷமானது என்னவென்றால், பயம் இல்லை என்று நினைப்பதல்ல. யுத்தத்துக்குப்போகிற ஒவ்வொரு வீரனும் ஏதோ ஒரு சமயத்தில் பயப்படுவான். ஆனால் பயம் என்கிற குணத்தைக் கொடுக்கிற கடவுள் அவசியமில்லாத சமயத்தில் அந்தக் குணத்தை அடக்கிக்கொள்ள பலத்தைக் கொடுப்பார். இந்த சத்தியத்தைத்தான் பிள்ளை அறியவேண்டும்.

---

# VIII. மனோபாவனை சக்தி

யோசிக்கும் சக்தி உண்டான பிற்பாடு பிள்ளை தன் மனத்தினுள் அநேக உணர்ச்சிகளை அடக்கிக்கொண்டிருக்கும் என்று தெரிகிறது. வெவ்வேறு உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டிருக்குமென்று காட்டுகின்ற வெவ்வேறு உணர்ச்சிகள் திரும்பத் திரும்ப வெளிப்படும்பொழுது ஞாபகசக்தி உண்டாகிறதென்று சொல்லுகிறோம். பிள்ளையின் ஞாபகத்திலே அநேக காரியங்களைத் திட்டமாய் நினைத்துக் கொள்ள உற்சாகப்படுத்துகிற ஒவ்வொரு ஏற்பாடும் அதிகப் பிரயோசனம். ஆனால் இந்தியா தேசத்தில் வகுப்பு வேலையில் இருக்கிற ஒரு குறைவு என்னவென்றால், ஞாபக சக்தியைமாத்திரம் உபயோகிக்கிறார்களேயன்றி அதிலிருந்து உண்டாகும் இன்னொரு விசேஷித்த சக்தியைக் கவனிக்கிறதில்லை. அது மனோபாவனை சக்தி.

இந்தச் சக்தியினால்தான் மனுஷர் மற்ற மிருகங்களைப் பார்க்கிலும் மேலானவர்கள். நாம் எல்லாரும் இந்தச் சக்தியினால் தற்காலத்தில் ஐம்புலன்களின் மூலமாய் செவிக்கும் நேத்திரத்துக்கும் தெரிகிற காரியங்களை மாத்திரம் யோசிக்காமல் ஞாபக சக்தியினால் வெவ்வேறு யோசனைகளைச் சேர்த்து ஒன்றோடொன்றை வெகு விநோதமாய்ச் சம்பந்தப்படுத்தி ஒரு நாளும் பார்க்காத காட்சிகளை யோசிக்கக் கூடியவர்களாய் இருக்கிறோம். இதுதான் அதிக விசித்திரமான திறமை. இதினால் மனுஷர் பெரிதும் ஆச்சரியமான நிலைமைக்கு வந்திருந்தாலும் அம்மட்டிலேயே நிற்கமாட்டார்கள். புது யந்திரங்களைக் கண்டுபிடித்து அவசியமான கைவேலையைக் குறைக்கிறார்கள். புது இடங்கள் எப்படிக் கிடைக்குமென்று யோசித்து அங்கேபோக எவ்வித தடையிருந்தாலும் அதை மேற்கொண்டு போவார்கள். தங்கள் மனத்தினுள் கிரகிக்கக்கூடிய நிலைமைகளைத் தாங்களே சிருஷ்டிக்கிறார்கள்.

சிருஷ்டிக்கிறதற்கு மனோபாவனா சக்திதான் அஸ்திபாரம். அதினால் சிறுபிள்ளைகள் கட்டைகளைக்கொண்டுவந்து தங்கள் சொந்த யோசனையின்படி ஏதோ ஒன்றைச் சிருஷ்டிப்பதிலிருந்து அவர்களுக்கு இந்தச் சக்தி உண்டாகிறதென்று நாம் அறிந்துகொள்ளலாம். அதை அற்பக் காரியமென்று நினைக்காமல் ஞானத்தோடு இந்த வல்லமையுள்ள திறமையைப் பலப்படுத்துவது நமது கடமையாகும். பிள்ளை தானே எவற்றை உண்டாக்கியிருக்கிறதோ எவற்றைக் கண்டுபிடித்திருக்கிறதோ அவற்றை ஒருநாளும் மறந்துவிடமாட்டாது. அந்தந்தக் காரியங்களில் அதன் மனம் ஊன்றி இருக்கும். இக்காரணத்தினால் தற்காலத்தில் படிப்பிக்கும் முறை என்னவென்றால், பிள்ளையின் அநேக உபகரணங்களை வைத்துக்கொண்டு அவைகளை உபயோகித்துத் தன்னநுபவத்தில் அறியச்செய்வதேயாம். உபாத்திமார்கள் இன்னும் அதிக விரைவாய் இந்த முறையை நம்பி உபயோகித்தால் படிப்பு விஷயத்தில் ஆச்சரியமான தூண்டுதல் உண்டாகும். நமக்கு இருக்கிற அறிவைப் பிள்ளைகளுக்கு ஊட்டிவிட்டால் போதும் என்று அனேகர் நினைக்கிறார்கள். தாங்களே சிருஷ்டிக்கும்படியாக நாம் நம்முடைய பிள்ளைகளை கற்பிக்கிறோம் என்று நினைத்தால் பிள்ளைகளின் மன வளர்ச்சியைக் கண்டு அதிசயித்துப் பல விஷயங்களைக் கற்றுக்கொள்ளலாம்.

மற்றெல்லாச் சக்திகளிலும் இருப்பதுபோன்ற மோசம் இதிலும் உண்டு. பல பெற்றோர்கள் மனோபாவனா சக்தியைப் பலப்படுத்தினால் பிள்ளைகள் லகுவாய்ப் பொய் சொல்லுகிறார்கள் என்று நினைத்துக் கூடியசீக்கிரம் அதிகக் கண்டிப்போடு அந்தச் சக்தியைத் தடுக்கிறார்கள். முதலாவது ஒரு பிள்ளைக்கு ஒருவேளை வித்தியாசம் தெரிகிறதில்லை. தன் மனத்தினுள் பயங்கரமான மிருகங்களையும் ஆனந்தமான காட்சிகளையும் பார்த்துத் தனக்கு நிச்சயமாய் நடந்த அநுபவங்களென்று நினைத்[துக்] கொண்டு அவற்றை விரிவாகச்

சொல்லும். ஆனால் ஒரு தாய் பிள்ளையோடு நன்றாய்ப்பேசி னால் சீக்கிரமாய் இந்த வித்தியாசத்தைக் காண்பிக்கலாம்; பிற்பாடு பிள்ளை சங்கதியைச் சொல்லும் நேரத்தில், அது கண்ணினால் கண்டதோ, மனதினுள் கிரகித்ததோ. என்று உண்மையாய்க் காட்டப் பழக்கலாம்.

ஒரு சிறு பெண்பிள்ளைக்கு இந்தச் சக்தி வெகு தீவிரமா யிருந்தது. பிள்ளை அடிக்கடி பொய்சொல்லத் தொடங்கின தினாலே தாய்க்கு அதிக மனவருத்தம் உண்டாயிற்று. தாய் தன் மகளிடம் இவ்விஷயத்தைக்குறித்துப் பொறுமையாகப் பேசினாள்; நாம் சிலசமயங்களில் கண்டதையும் கேட்டதை யும் சிறிதுமே மாற்றாமல் சொல்லலாம் என்றும், வேறு சில சமயங்களில், யோசிக்கும் காரியங்களையும் மற்றக் காரியங் களையும் சந்தோஷமுண்டாகுமாறு சொல்லலாமென்றும் காண்பித்தாள். தாய் செய்த இம்முயற்சியினால் அந்தப் பெண், விஷயங்களை உள்ளபடிச் சொல்வதற்கும் சேர்த்துக் கட்டிச் சொல்வதற்குமுள்ள வித்தியாசத்தை நன்றாக அறிந்துகொண்டாள். இவ்வாறு ஏற்பட்ட சக்தியினால் அவள் சிறு வயதில் நேர்த்தியான கதைகள் கட்டப் பழகினபிறகு உலகத்தார் எவரும் வாசித்து மகிழக்கூடிய புஸ்தகங்களும் எழுதலானாள். இந்தத் திறமை எந்த வழியைக் காட்டும் என்று முன்னதாகவே சொல்லமுடியாது. ஆனால் புகை வண்டி, ஆகாயக்கப்பல், வேதனை நீக்கும் மருந்து முதலி யவைகளெல்லாம் இப்படியே ஒரு சிறு பிள்ளையின் மனத்தில் தொடங்குகிறது.

வீடுகளில் பிள்ளைகளை உபகரணங்களோடு இன்னும் விளையாட விட்டு அவர்களில் சிருஷ்டிப்பதற்கான உணர்ச் சியை உண்டாக்கவேண்டும். இதற்கு அதிகப் பணசெலவு இல்லை. வ்ரோபேல் என்பவர் சிறு வயதில் பெரியவர்கள் கட்டிக்கொண்டிருந்த கோவிலையும் கற்களையும் பார்த்துத் தானும் குச்சிகளைச் சேர்த்து ஒரு சிறு கோவிலைக் கட்டப்

பிரயாசப்பட்டார். பிற்காலத்தில் இதை நினைத்தே எல்லாப் பிள்ளைகளுக்காகவும் எத்தனையோ கட்டைகளை ஒழுங்குப் படுத்திக் கொடுத்தார். வகுப்பிலே உபகரணங்களைச் சேக ரித்துக் கொடுப்பதோடு இந்தச் சக்தியினால் பிள்ளைகளில் பரிதாபங்காட்டுங் குணத்தையும் அதிகப்படுத்தவேண்டும். இதற்காக மிருகங்களைப்பற்றிய அநேக விளையாட்டுகள் விளை யாடுதல் நலமாம். இந்தச் சக்தியை வளர்க்கக் கதைகள் உணவுபோன்றன என்று சொல்லலாம். இந்த விஷயத்தி லுங்கூட நாம் பிள்ளைகளின் மனத்தேர்ச்சிக்குக் கொடுக் கிற போஷிப்பு வளர்ச்சிக்கேற்றதோ இல்லையோ என்று யோசிக்கவேண்டும் காலா காலத்தில் பிள்ளைகள் தங்கள் முன்னோர்கள் எந்த நிலைமையில் இருந்தார்களென்று யோசிக் கிறார்கள்; அல்லது மற்றத் தேசத்திலுள்ளவர்கள் இப்பொ ழுது எந்த நிலைமையில் எப்படி யிருக்கிறார்கள் என்று கேட் கிறார்கள்.

இப்படிப்பட்ட கேள்விகளுக்கு நாம் தாராளமாய் மறு மொழி கூறப் பிரயாசப்படவேண்டும். நாம் திருப்தியான மறுமொழி கூற முடியாவிட்டால் பிள்ளைகளோடு சென்று ஏற்றப் புஸ்தகங்களைக் கண்டுபிடித்து அவர்களோடு சேர்ந்து விஷயங்களை அறியப் பிரயாசப்படுவோமாக. நாமும் படிக் கிறோம் என்று கண்டால் அவர்கள் நம்மை மதிப்பார்கள். இந்தச்சக்தியினால் கஷ்டமான நிலைமையில் இருக்கிறவர்க ளோடு பரிதாபப்பட்டு அநேக நல்ல கிரியைகளைச் செய்யப் பிள்ளைகளை நடத்தவேண்டும்.

கடைசியாக, மனுஷர் ஒருநாளும் காணாத கடவுளை காண் பதற்கும் இந்த வழியே உகந்தது. இந்த மனோபாவனா சக்தி நம்மிடத்தில் சீராக அமைவதற்கு ஏற்றபடி நாம் கடவு ளின் நோக்கங்களை அற்புதமாக அறிந்து அவரது முறைக ளைச் சோதித்து அவரோடு சேர்ந்து நம்முடைய உலகத் தைச் சிருஷ்டிக்கிறோம். பிள்ளைகளும் இந்தச் சிலாக்கியக்

னதயடைய நாம் அவர்களுக்கு எத்தகைய தடையும் செய்யாமல் இருப்போமாக. மனோபாவனா சக்தியின் வல்லமையை அறிந்தவுடனே பிள்ளைகளுக்குக் கதைகள் ஏன் அவ்வளவு பிரியம் என்று தெரிகிறது. இந்தச் சக்தியினால் உண்டாகிற ஆசைகளுக்குக் கதைகளின் மூலமாய்த் திருப்தி உண்டாகிறது. கதைகளின் மூலமாய்த் தாய்மாரும் உபாத்திமாரும் மனோபாவனா சக்தியைச் சரியாய் நடத்திப் பலப்படுத்தலாம்.

வீட்டிலே பிள்ளை 'எனக்குக் கதை சொல்லு' என்றவுடனே, தாய் தனக்குக் கிடைத்த சிலாக்கியத்தைச் சரியாய் அறிந்தால், பிள்ளையின் சரீர வளர்ச்சிக்கு எப்படி ஆகாரம் கொடுக்கிறாளோ அதே விதமாய் பிள்ளையின் மனத்தில் நல்ல சுத்தமான எண்ணங்களைக் கதைகளின் மூலமாய் உண்டாக்கப் பிரயாசப்படுவாள். அநேக விதமான கதைகள் உண்டு. கதைகளை வெவ்வேறு விதமாய்ச் சொல்லிப் பயனடையச் செய்யலாம். மற்றெல்லாக் காரியங்களைப்போல இதற்கும் ஒரு நல்ல முறையும் ஒரு கெட்ட முறையும் உண்டு. ஒரு குடும்பத்தில் பிள்ளைகள் அநேக நல்ல கதைகளை வாசித்துத் தங்கள் மனத்தில் ஓயாமல் பிரயோசனமுள்ள யோசனைகளைச் சிருஷ்டித்துத் தாங்களே தங்களின் தியானங்களை மற்றவர்களின் உதவிக்காக நேர்த்தியான பாஷையில் தெரிவிக்கக் கூடியவர்களாயிருக்கிறார்கள். இன்னொரு குடும்பத்தில் பிள்ளைகள் பல கெட்ட கதைகளைக் கேட்டு, உலகம் அப்படித்தானென்று நினைத்து, அக்கதைகளிலிருந்து தெரிந்து கொண்ட துஷ்டத்தனத்தைத் தேடுவார்கள். கதைகளைக் கற்பித்து பிள்ளைகளின் ஆசைகளைச் சீர்ப்படுத்துகிறோம்.

முதலாவது, பெரியவர்கள் எப்பொழுதும் கதை சொல்ல வேண்டி யிருப்பதினாலே, அவர்களின்மேல் ஒரு பொறுப்பு உண்டு. அவர்கள் யோசனையோடும் ஞானத்தோடும் பிள்ளைகளுக்கு என்னென்ன கதைகள் பிரியமும், பிரயோசனமுமாகும் என்று நினைத்தால், போதகர்மார் எப்படி

பெரியவர்களுக்கு ஆலோசனை சொல்லி ஆத்தும விஷயங்களில் மேய்ப்பர்களாய் இருக்கிறார்களோ, அப்படியே சிறுவர்களின் ஆத்துமாக்களை வளர்க்கிற வேலையில் மேய்ப்பர்களாக விளங்கலாம்.

எல்லாக் கதைகளும் எல்லாப் பிள்ளைகளுக்கும் உடனே பிரியமாய் இருக்காது. பிள்ளையின் வயதிற்கும், வளர்ச்சிக்கும் ஏற்றவாறு கதைகளை இரகசிக்கும் தன்மை வித்தியாசமாயிருக்கும். கதைக்கும் பிள்ளையின் ஜீவியத்துக்கும் சம்பந்தம் அவசியம். கதை சொல்லுகிற முறையிலும் சில காரியங்கள் அவசியம். சிலருக்கு மாத்திரம் கதை சொல்லும் சக்தி இயற்கையாய் இருக்கிறது. இன்னும் அநேகர் பிள்ளைகளின் அன்பான விண்ணப்பங்களினால் யோசனையோடு கதை சொல்லப் பழகியிருக்கிறார்கள். மேற்குத் தேசங்களில் ஒவ்வொரு பெரிய புஸ்தகசாலையிலும் பிள்ளைகளுக்கேற்ற புஸ்தகங்கள் வைத்திருப்பதோடு வாரந்தோறும் ஏதோ ஒரு ஒழுங்கின்படி ஒரு உபாத்தினியம்மாள் அந்தக் கட்டடத்துக்கு வந்து தெருவிலிருந்து வரும் பிள்ளைகளுக்கு இரண்டொரு மணிநேரம் கதை சொல்லி, அவர்கள் அந்த புஸ்தகசாலையில் வாசிக்கக்கூடிய நல்ல புஸ்தகங்களை எடுத்துக் காட்டி, கேட்கிறவர்களுக்குச் சொல்லிமுடியாத நன்மை செய்கிறாள். இந்தத் திறமையைப்பற்றிய சில பொதுவான சட்டங்களை யோசித்துச் சோதித்துப் பார்ப்போம். எந்தெந்தக் காலத்தில் என்னென்ன கதை சரியாய் இருக்கும்? ஆறுவிதமான கதைகளை விஸ்தரித்தபின்னர் அவைகளை உபயோகிக்கக்கூடிய காலங்களைக் கவனித்துப் பார்ப்போமாக. முதலாவது பிள்ளைகள் கதைகளிற் பிரியப்பட்டு கதை சொல்லவேண்டும் என்று ஆசைப்படும்பொழுது பிள்ளைகள் ஐம்புலன்களும் பலப்படும் நிலைமையில் இருக்கிறார்கள். நேத்திரத்திற்கும் செவிக்கும் திருப்தி தேவை. அதினால் இந்தக் காலத்தில் பிள்ளைகளுக்கு எந்தக் கதைகள் பிரியம் என்றால்,

ஓசையும் தாளமுமுள்ள கதைகளாம். ஒரு கதையில் ஏதாவது ஒரு வாக்கியம் திரும்ப திரும்ப வரும்பொழுது பிள்ளையின் செவிக்கு அது இன்பமாயிருக்கும்.

அப்படிச் சொல்லுவதினால் பிள்ளைகளின் பாஷையும் விர்த்தி யடைகின்றது. கண்ணுக்கு எப்படி நிறமுள்ள பொருட்கள் பிரியமோ அதே விதமாய் கதைகளின் நிறமுள்ள காட்சிகள் பிள்ளைகளுடைய ஐம்புலன்களையும் பலப்படுத்த உதவியாம். ருசிக்கும் சக்தி இந்தக் காலத்தில் அவ்வளவு பலமாய் இருக்கிறதினாலே கதைகளைப் பிள்ளைகளுக்குப் பிரியப்படுத்த ஏதுவாய் இருக்கும். அதினால் இம்முதற் பருவத்தில் பிள்ளைகளின் ஐம்புலன்களுக்கும் பிரியமான கதைகளைச் சொல்லி அவைகளின் மூலமாய்ப் பிள்ளைகளின் ஆசைகளையும் இச்சைகளையும் சுத்தப்படுத்தப் பிரயாசப்படுவோமாக. ஐம்புலன் உண்டானவுடனே பிள்ளையின் கவனிக்கும் சக்தி கூர்மையாய் இருக்கிறது என்று பார்க்கிறோம். அப்பொழுதுதான் சிறுவர்கள் உலகம் எங்கும் தாம் கண்டடையக்கூடிய ஆஸ்திகள் உண்டு என்று அறியவேண்டும். இயற்கைக் காரியங்கள் மிகவும் ஆச்சரியமானவை என்று தெரிவிப்பது நமது கடமை இந்த விஷயத்தில் இயற்கைப் பொருட்களைப்பற்றிய உண்மையான கதைகள் அதிகப் பிரயோஜனமாகும். மிருகங்களும் பூச்சி புழுக்களும் மனுஷரைப்போல் பேசுவதைக் காட்டினால் கதைக்கு உயிர்கொடுப்பதுபோல் இருக்கும். ஆனால் மிருகங்கள் முதலியவைகள் செய்வன யாவும் இயற்கைக்குத் தக்கதாயிருக்கவேண்டும்.

அடுத்த பருவம் மனோபாவனா சக்தி வளரும் பருவம் என்று சொல்லலாம். இப்பொழுது பிள்ளைகளுக்கு மிகவும் பிரியமாயிருக்கிற கட்டுக்கதைகளை உபயோகிப்பது தகுதியாகும். ஏனென்றால் நாம் பிள்ளைகளுக்குள்ள மனோபாவனா சக்தியை உற்சாகப்படுத்த ஆசையாய் இருக்கிறோம். இந்தக் காலத்தில் அவர்கள் தங்களை மறந்துவிட்டுக் கட்டுக்கதை

களுக்குள் ஜீவிக்கிறதைப்போல விளையாடுவது மெத்த நல்லது. நடிக்கும் சக்திக்கு இடம் கொடுப்போம். ஆனால் 'அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு' என்கிற பழமொழியை நாம் நினைத்துக்கொள்ளவேண்டும். அதிக காலம் இந்த விதமான கதைகளை மாத்திரம் பிள்ளைகளிடத்தில் சொல்லிக்கொண்டே யிருந்தால், அவர்களுடைய மனங்களுக்கு அதிக இனிப்புள்ள ஆகாரம்கொடுத்து சரீரத்திற்குக் கெடுதி செய்வதுபோல சுத்த யோசனைகளைக் கெடுத்துவிடுவோம். இதற்குப்பிறகு பிள்ளையின் ஜீவியத்தில் இன்னொரு மாறுதல் உண்டாகும். இதுவரைக்கும் பிள்ளைகள் பெரியவர்களைக் கவனித்து, விசேஷமாய், தங்கள் பெற்றோர்களைப் பார்த்து, 'இந்த உலகத்தில் எல்லாரும் தப்பிதங்கள் செய்கிறார்களே; முன் கருதியபடி பெரியவர்கள் பரிபூரண மனிதர்களா' என்று அவர்கள் மனத்தில் ஒரு விதமான சந்தேகம் கொள்வார்கள். இதே காலத்தில் பெரியவர்கள் பிள்ளைகளைச் சரியாய்ச் செய்யும்படி கட்டாயப்படுத்த அதிக ஆசைப்படுகிறார்கள். பிள்ளையின் தீர்மானிக்கும் சக்தி நன்மைக்கு அல்லது தீமைக்கு உபயோகப்படுமோ என்று ஆவலோடு கவனிக்கிறோம். இப்பொழுதுதான் வீரரைப்பற்றிய கதைகள் அதிக நன்மையாக இருக்கும். அவைகளின் மூலமாய்ப் பூரணமான குணங்களைக் காட்டலாம். இந்தக் கதைகளில் ஆண்களும் பெண்களும் வெளிச்சத்தைப்போல பிள்ளைகளுக்கு முன் மாதிரியை வெளிப்படுத்துகிறார்கள். இவர்களைப் புகழ்ந்துகொண்டு சித்தம் என்கிற சக்தி விர்த்தி ஆகும். இந்தக் காலத்தில்தான் இயேசுகிறிஸ்துவின் ஜீவியத்தைச் சிறுவர்களுடைய உள்ளத்தில் சூரியனுடைய கதிர்களைப்போல் பிரகாசிக்கச் செய்யவேண்டும்.

இந்த அனுபவங்கள் எல்லாம் பிள்ளைக்கு வந்த பிற்பாடு அதன் ஞாபக சக்தியைக் கவனிப்பது அவசியம். அவர்கள் முற்காலத்தைப்பற்றிக் கேள்விப்படுகிறார்கள். அப்பொழுது

அவர்கள் பெரியவர்களிடம் அவரது சிறு பிராயத்தைப்பற் றிச் சொல்லச் சொல்லுவார்கள். இதனால் சரித்திரக் கதை கள் இந்தக் காலத்துக்கு ஏற்றது என்று சொல்லலாம். இதோடு பிள்ளைகள் வரவர உலகத்தாருக்குள் வித்தியாசங் கள் உண்டு என்று கவனித்து மற்றத் தேசங்களையும் மற்ற தேசத்தாரையும் குறித்து விசாரிக்கிறார்கள். உலகம் எங்கும் எவ்வளவு வித்தியாசம் தெரிந்தாலும் பிள்ளைகளின் விளை யாட்டும் விசனமும், ஆசையும் ஆச்சரியமும் ஒன்றுதான் என்கிற நோக்கத்தோடு பூமிசாஸ்திரப் பாடத்துக்குச் சம் பந்தமான அநேக கதைகளைச் சொல்வது நல்லது.

கதைகளைக் கேட்கிறோம். கதைகளை வாசிக்கிறோம். பிள்ளைகள் வாசிக்கப் படித்தவுடனே சாதாரணமாய்க் கேட்க அவ்வளவு பிரியப்படமாட்டார்கள். ஏனென்றால் பெரியவர் களுக்குள் மிகச் சிலரே கதையைச் சொல்லும் சக்தியைச் சரியாய்ப் படித்துக்கொண்டிருக்கிறார்கள். இதைப்பற்றி சில பொதுவான சட்டங்களை நாம் நினைத்துக்கொள்ள வேண்டுவது அவசியம்.

1. கதைக்கும் பிள்ளையின் அனுபவத்துக்கும் ஒரு சம் பந்தம் இருக்கவேண்டும். அதில்லாவிட்டால் உபாத்தியாயர் எவ்வளவு பிரயாசப்பட்டாலும் சித்தியடையமாட்டார்.

2. பிள்ளைகள் கவனிக்கிறார்களோ இல்லையோ என்று உபாத்தியாயருக்குத் தெரியவேண்டும். பள்ளிக்கூடங்களில் ஒரு சாதாரணமான காட்சி என்னவென்றால், உபாத்தியா யர் ஒரு கதையை நேர்த்தியாய் சொல்லிக்கொண்டிருப்பார்; பிள்ளைகள் கதையைக் கவனிக்காமலே இருப்பார்கள். ஆனால் உபாத்தியாயர் அதை அறியாமல் சுவருக்குப் பேசுவது போல பேசிக்கொண்டேயிருப்பார். கைகட்டி அசையாமல் இருந்தாலும் அதினாலே பிள்ளைகள் கவனிக்கிறார்கள் என்று நினைக்கக்கூடாது. சில சமயங்களில் பிள்ளைகள் சத்தம் செய்

தாலும் கதையின்மேல் மனம் வைத்திருக்கிறார்கள் என்று தெரிகிறது.

**3.** கதையைச் சொல்லுகிறவர்கள் எப்பொழுதும் கதையின் சங்கதிகளைத் தம்முடைய கண்களுக்கு முன்பாக நடக்கிற காரியங்களாகச் சொல்லவேண்டும். இதற்கு மனோபாவனா சக்தியும், நடிக்கும் சக்தியும் அதிகம் வேண்டும். இத்தன்மை இயற்கையாய் இல்லாவிட்டால், பிள்ளைகளுக்காக அவைகளை அடைந்துகொள்ளப் பிரயாசப்பட்டுக்கொண்டேயிருக்கவேண்டும். கதையின் மூலமாய் எந்த வயதிலும் பிள்ளைகளை நம்மிடத்தில் வரச்செய்யலாம்.

---

## IX. விளையாட்டு

### 1. பிள்ளைகள் ஏன் விளையாடுகிறார்கள்?

உலகம் எங்குமுள்ள பிள்ளைகள் விளையாடுகிறார்கள் என்று தெரிகிறது; ஆனால், ஏன் பிள்ளைகள் விளையாடுகிறார்கள் என்று ஒரு கேள்வி ஏற்படலாம். அந்தக் கேள்விக்கு அநேக விதமான மறுமொழிகள் உண்டு. சிலர் பிள்ளைகளுக்கு அதிகப் பெலனும், உற்சாகமும், முயற்சியும் இருக்கும் காலத்தில் அதை வெளிப்படுத்த ஒரு வழி வேண்டும் என்றும் 'அந்த வழி விளையாட்டேயாம்' என்றும் சொல்லுகிறார்கள். இது உண்மை என்று தோன்றுகிறது. ஏனென்றால் சுகமுள்ள பிள்ளைகள் வியாதியுள்ள பிள்ளைகளைப் பார்க்கிலும் அதிகமாய் விளையாடுகிறார்கள் என்று நிச்சயமாய்த் தெரியும். அப்படியானால் பிள்ளைகள் வயதாகுந்தோறும் அவர்களுடைய விளையாட்டுக்களும் மாறி வருகின்றனவே. இதற்குக் காரணம் என்ன என்று கேட்பதாயிருந்தால், 'பிள்ளைகளிடத்தில் காணப்

படும் அதிக சக்தியை வெளிப்படுத்த முயலும் முயற்சியே விளையாட்டு' என்று சொல்வது பொருந்ாது.

வேறொருவர் சொல்லும் காரணமாவது, பிள்ளைகள் விளையாட்டிலே பெரியவர்களைப்போலச் செய்ய முயன்று தங்கள் வருங்கால ஜீவியத்திற்குத் தங்களை ஆயத்தம் பண்ணிக்கொள்ளுகிறார்கள் என்பதே. இக்கொள்கை எல்லா வகையாலும் சரியானதாய்த் தோன்றவில்லை. ஏனென்றால் சில பிள்ளைகள் பெற்றோரின் ஜீவியத்திற்கு முற்றிலும் வித்தியாசமான காரியங்களைச் செய்கிறார்கள்.

பிள்ளைகள் ஏன் விளையாடுகிறார்கள் என்பதற்குக் கூறப் படும் இன்னொரு அபிப்பிராயமாவது, ஒரு ஜாதியாரின் அப்பியாசங்களும், அனுபவங்களும் பிள்ளைகளின் விளையாட்டிலே சரித்திர பாடமாகத் தெரிகிறது என்பதே. அப்படியானால், பிள்ளைகளின் ஒழுங்குகள் நமக்கு விளங்காது. ஏனென்றால் பிள்ளை முதலாவது தற்காலத்து விளையாட்டுக்களை விளையாடலாம். அதன்பிறகு அவர்கள் காட்டு ஜனங்களைப்போல நடித்து விளையாடலாம். இதனால் இந்த அபிப்பிராயமும் சரியென்று தோன்றவில்லை.

பேர்போன போதனாமுறை தெரிந்த ஒரு சாஸ்திரியார் இதெல்லாம் சரியான காரணமல்ல என்று காட்டி விளையாட்டுக்கு விசேஷித்த காரணம் போட்டிப்போடுங் குணமேயாம் என்கிறார். வேறொரு அம்மாள், பிள்ளைகள் தம் உடலின் தேவைகளுக்குத் தக்கபடி விளையாடுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். இதுதான் உண்மையான காரணம் என்று தோன்றுகின்றது.

## 2. வேலைக்கும் விளையாட்டுக்கும் வித்தியாசம் என்ன?

நாம் இதே கேள்வியை இன்னொருவிதமாய் அமைத்து அப்பியாசத்துக்கும் விளையாட்டுக்கும் வித்தியாசம் என்ன என்று கேட்கலாம். பிள்ளைகள் செய்கிற அநேககாரியங்

களுக்கும் அவர்களின் ஜீவியத்துக்கும் இருக்கும் சம்பந்தம் நமக்குத் தெரியாததினலே அதை வெறும் விளையாட்டு என்று நினைக்கிறோம். ஆனல் வரவர அநேக விளையாட்டுக்களின் நோக்கம் தெளிவாய்க் காணப்படும்பொழுது அவைகளுக்கும் அப்பியாசத்துக்கும் மிகவும் வித்தியாசம் இருப்பதாகத் தெரியவில்லை. விளையாட்டு என்னும் வார்த்தைக்கு மூன்றுவிதமான அர்த்தங்கள் உண்டு.

1. நாம் சிறு பிள்ளைகளோடு விளையாடி அவர்களைச் சந்தோஷப்படுத்தப் பிரயாசப்படுகிறோம்.

2. பிள்ளைகள் ஏதோ ஒரு விளையாட்டின் சட்டங்களைப் படித்துப் போட்டிப்போடும்படியாக விளையாடுகிறார்கள்.

3. பிள்ளைகள் தங்களுடைய சுகத்துக்கு எது தேவை என்ற மேலான நோக்கத்தைக்கொண்டு விளையாடுவார்கள்.

விளையாட்டுக்கும் வேலைக்கும் என்ன வித்தியாசம் என்று அடிக்கடி கேட்கிறோம். ஒரு ஆளுக்குத் தான் செய்யும் வேலை மிகவும் பிரியமாய்த் தோன்றுகிறதினலே அது ஓர் விளையாட்டுப்போல் இருக்கிறது. சில பிள்ளைகள் விளையாட்டில் சந்தோஷப்படாவிட்டால் கட்டாயத்தினல் செய்விக்கப்படும் கஷ்டமான கடமை ஒன்றைச் செய்கிறவர்கள்போல செய்வார்கள். ஆகையால் நாம் எந்த நோக்கத்தோடு பார்க்கிறோமோ அதற்கேற்றபடி வித்தியாசமும் தெரியும் என்று தோன்றுகிறது. ஒருவர், நான் வேலையைச் செய்கிறேன் என்று சொல்லும்பொழுது ஏதோ ஒரு நோக்கத்தை நிறைவேற்றும்படி இப்படிப்பட்ட ஓர் அப்பியாசத்தைச் செய்கிறேன் என்று சொல்வதைப்போல் தோன்றுகிறது. ஒருவேளை விளையாட்டில் இந்த நோக்கமே இருக்கலாம். அப்படியிருந்தாலும் அப்பியாசம் பண்ணும்பொழுது மிகவும் சந்தோஷமாய் இருக்கிறதினலே அதை விளையாட்டு என்று சொல்லுகிறோம். ஒரு மனிதன் சில பையன்களைக் கூப்பிட்டு ஒரு தோட்டத்திலிருக்கிற ஒரு

மாதிரிப் பூச்சிகளைப் பிடித்துக் கொன்றுவிட்டால் காசு கொடுக்கிறேன் என்றான். அந்தப் பையன்கள் பணம் சம்பாதிப்பதற்காக அப்படியே செய்தார்கள். என்றாலும் அது கஷ்டமான வேலையாகவே தோன்றினது. ஆனால் அதைச் செய்யும்போது வரவரப் போட்டிபோட ஆரம்பித்தார்கள். அப்பொழுது ஒவ்வொரு பையனும் மற்றவர்களைப் பார்க்கிலும் அதிகமான பூச்சிகளைக் கொன்று கொண்டுவந்து காட்டப் பிரயாசப்பட்டான். அப்பொழுது அதை ஒரு வேலையாக நினைக்காமல் விளையாட்டாகச் செய்து முடித்தார்கள். பிள்ளைகள் ஏதாவது ஒன்றை பெரியவர்களின் கட்டாயத்திற்காக மாத்திரம் செய்தால் விளையாட்டிலிருக்கும் சந்தோஷமும் முயற்சியும் அதில் காணப்படா. இதனாலேதான் பிள்ளைகள் வீட்டிலும் வகுப்பிலும் பலவகை அப்பியாசங்களையும் எந்தெந்த நோக்கத்தோடு செய்கிறார்கள் என்று நாம் விசாரித்துப் பார்க்கவேண்டும். இதுபற்றியே நாம் இந்த விஷயமாக இன்னொரு கேள்விக்கும் விடை தெரிந்துகொள்ள வேண்டியவர்களாய் இருக்கிறோம். வகுப்பில் விளையாட்டுமுறை ஏன் அவ்வளவு விசேஷமாய் இருக்கிறது? பிள்ளைகள் வகுப்பில் நடக்கும் பாடங்களின் மூலமாய்ப் படிக்கிறதைப்பார்க்கிலும் விளையாட்டின் மூலமாய்த் தெரிந்துகொள்ளும் விஷயங்கள் அதிகமென்று அநுபவத்தினால் அறிந்திருக்கிறோமாகையால் இந்த விளையாட்டு முறையை மேன் மேலும் அதிகமாக வகுப்பு அறையில் உபயோகிக்கலாம் என்று கண்டுபிடித்திருக்கிறோம். விளையாட்டு என்றால் வெறும் தேக அப்பியாசங்களேயாம் என்று நினைக்கக்கூடாது. வயதுக்குத் தக்கதாக பிள்ளைகளின் விளையாட்டுக்கள் மாறிக்கொண்டே வரும். உலகம் எங்கும் இதை ஒட்டின அபிப்பிராயத்தில் பொருத்தம் இருப்பதாகத் தெரிகிறது. முதல் நாலு வருஷங்களில் பிள்ளைகள் ஐம்புலன்களையும் உணரும்படியாகவும் தேகபலத்

தைச் சோதிக்கும்படியாகவும் தனிமையாய் விளையாடிக் கொண்டேயிருப்பார்கள். நாலு வயதுமுதல் சிறுபிள்ளைகள் ஊதுகிறதற்கும், அடிக்கிறதற்கும், ஓட்டுகிறதற்கும் பலமான விளையாட்டுச் சாமான்களைத் தேடுகிறார்கள். இந்தப் பருவத்திலே நாம் எந்தெந்த விளையாட்டுப் பொருட்களைப் பிள்ளைகளுக்குக் காட்டப்போகிறோம் என்பதுதான் மிகவும் முக்கியமான விஷயம். ஏழாவது வயதில் ஒரு மாறுதல் உண்டாகிறது. பிள்ளை தன் விளையாட்டுச் சாமான்களோடு தனிமையாய் விளையாடப் பிரியப்படாமல் மற்றப் பிள்ளைகளோடுகூடிச் சேர்ந்து பெரியவர்களுடைய அப்பியாச முறையிலே விளையாடுவார்கள். கலியாணம், விருந்து, மரணம் வியாதி, தண்டனை இப்படிப்பட்டவைகளை எல்லாம் பிள்ளைகளும் யோசித்துக்கொண்டிருக்கிறார்கன் என்பது அவர்களுடைய விளையாட்டின் மூலமாய்த் தெரிகிறது. அதோடு போட்டிப்போடும் குணமும் உண்டாகிறது. பத்தாம் வருஷம் முதல் பன்னிரண்டாம் வருஷம் வரைக்கும் பிள்ளைகள் பலவிதமான அப்பியாசங்களிலும் விளையாட்டுக்களிலும் சந்தோஷப்படுகிறார்கள். ஆகையால் அந்த வயதுச்சிறுவர்களுக்கு மிகவும் ஊக்கமெடுத்து முயலும் உபாத்தியாயர்கள் அவசியம் என்று தோன்றுகிறது. அந்த வயதில் பெண் பிள்ளைகளும் பையன்களும் பிரிந்துபோவார்கள். அப்பொழுது அவர்கள் குண வித்தியாசங்கள் சிறிது தெரியும்.

பெண்கள் அநேக விதமான விளையாட்டுக்களை விளையாடினாலும் ஒன்றையேனும் அவ்வளவு திட்டமாய் அறியமாட்டார்கள். ஆனால் பையன்களோ ஏதோ ஒன்றிரண்டு விளையாட்டுக்களைத் தெரிந்துகொண்டு அவற்றில் தெரிந்த பையன்களைப்பார்க்கிலும் நன்றாய்ச் செய்ய முழுமனதோடு பிரயாசப்படுவார்கள். இந்தப் பருவத்தில் விளையாடுகிறதற்கு ஏற்ற பெரிய இடங்களைக் குறித்துக் கொடுப்பது மிகவும் அவசியம். பல பொழுதும் நல்ல சுத்தமுள்ள

இடங்கள் இல்லாததினாலேதான் பையன்களும் பெண்களும் இரகசியமான இடங்களுக்குப் போய் வரவரக் கெட்டகாரியங்கள் செய்யத் தலைப்படுகிறார்கள்.

இதன் பொருளைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் நாம் இரண்டு முறையில் தெரிந்துகொள்ளலாம். அதன் பிறகு நாம் பிள்ளைகளிடத்தில் கவனிக்கிற காரியங்களை ஒழுங்குபடுத்தலாம்.

1. தங்கள் சொந்த ஜீவியத்தில் தாங்கள் என்னென்ன விளையாட்டுக்கள் விளையாடியிருக்கிறார்கள் என்பதை ஞாபகப்படுத்தி ஒழுங்கு செய்துகொள்ளலாம்.

2. நம்முடைய நோக்கம் என்னவென்று பிள்ளைகளுக்கு காண்பிக்காமல் நாடோறும் வெவ்வேறு நேரங்களில் அவர்களைக் கவனித்து அவர்களுடைய அப்பியாசங்களையெல்லாம் ஒழுங்குபடுத்தவேண்டும்.

இதைச் செய்கிறதற்கு கீழே ஒரு அட்டவணை காட்டப்படும்.

## விளையாட்டைக் குறித்த ரிப்போர்ட்

1. சொந்த ஜீவியத்தில் விளையாடின விளையாட்டுக்கள்.
2. தற்காலத்தில் கவனிக்கிற விளையாட்டுக்கள்.

---

கீழே இருக்கிறபடி இரண்டு ரிப்போர்ட்டுகள் எழுதிக்கொள்ளலாம்

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| விளையாட்டின் விஸ்தரிப்பு | ஜாதி | வயது | தேக அப்பியாசம் | மன அப்பியாசம் | கூட்டமாய்ச் சேர்தல் |
| வாய்க்கால் தண்ணீரில் விளையாடுதல் | பெண்கள், 3 பையன்கள், 4 | 9–12 | கொஞ்சம் | ஐ. சி. மனோ. போ. | II |
| பொம்மை விளையாட்டு | பெண்கள், 5 | 9–10 | கொஞ்சம் | கைப். சி. அ. | II அல்லது I |
| தொட்டு ஓடுதல் | பையன்கள், 7 | 8 | அதிகம் | திரும்பத் திரும்பச் செய்வது. போ. | II |

அடையாளங்களின் அர்த்தம்:—

| 5 | 6 |
|---|---|
| கைப் — கைப்பழக்கம் | I. தனி விளையாட்டு |
| சா — சாமர்த்தியம் | |
| ஐ — ஐம்புலன்களின் வளர்ச்சி | II. எந்தக் கூட்டத்தோடும் சேர்வது |
| சி — சிருஷ்டித்தல் | |
| போ — போட்டிப் போடுவது | III. இருவர் இருவராய்க் கூடிச்செய்வது |
| மனோ— மனோபாவனா சக்தி | |
| தி — திரும்பத் திரும்பச் செய்வது | IV. கட்சிகளாகப் பிரிந்து விளையாடுவது. |
| ரா — ராகம் | |
| அ — அழகு | |
| பா — பாஷை | |
| க — கஷ்டங்களை நீக்குவது. | |

I. இரண்டாவது ரிப்போர்ட்டுக்கு அட்டவணை பாரம் முழுவதும் உபயோகிக்கவேண்டும்.

II. முதலாவது ரிப்போர்ட்டிலே இரண்டாவது கேள்வியை (ஜாதியை) விட்டு விட்டு மூன்றாவது கேள்விக்கு சிறு வயது முதல் பெரிய வயது வரைக்கும் ஒழுங்காய் எழுதுக.

---

# X. கடவுளைப்பற்றிய ஆராய்ச்சி

நம்முடைய ஜீவியத்தின் பிரதான நோக்கம் கடவுளை அறிவதேயாம். பல பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளிடத்தில் கடவுளைப்பற்றிப் பேசுவதினால் மட்டும் கடமையைச் செய்துவிட்டதாக நினைக்கிறார்கள். அநேக உபாத்தியாயர்கள் தினந்தோறும் வேத பாடத்தைப் போதித்து விட்டபடியால் பிள்ளைகளுக்குக் கடவுளைப்பற்றி நன்றாய்த் தெரியும் என்று சொல்லுவார்கள். ஆனால் எத்தனை பேர் பிள்ளைகளோடு பேசி அவரது மனத்தில் கடவுளைப்பற்றி எப்படிப்பட்ட யோசனைகள் ஏற்பட்டிருக்கின்றன என்று கண்டு பிடிக்கப் பிரயாசப்பட்டிருக்கிறார்கள்? அப்படிச் செய்தால் தான் நாம் இந்த விஷயத்தில் எவ்வளவு குறைவுள்ளவர்களாய் இருக்கிறோம் என்பது தெரியவரும். ஏறக்குறைய எல்லாப் பிள்ளைகளிடத்தும் நெடுங்காலம் ஒரு பயங்கரமான சிந்தனை இருந்து வரலாம். இது நமது சித்தமா? இது கடவுளின் நோக்கமா? என்ற கேள்வியைக் குறித்து யோசித்து ஆராய வேண்டும். எந்தக் காலத்திலும் அப்படிச் செய்யப் பல கஷ்டங்கள் உண்டு. குழந்தைக்குக் குழந்தை காணப்படும் தன்மை வித்தியாசத்தினால் ஏற்படும் கஷ்டங்கள் அதிகம். பெரியவர்கள் அதைக் கண்டு சிரித்தாலும், தங்களுக்கு ஒரு கஷ்டம் வரும்பொழுது ஒருவேளை பிள்ளைகளைப்போல தைரியத்தோடு எதிர்த்து நிற்கக்கூடியவர்களாய்க் காணப்படமாட்டார்கள். எந்தக் காலத்திலும் எல்லாருக்கும் தேவையானது, 'யாரோ ஒருவர் தம்மைப் பாதுகாத்துவருகிறார்; யாரோ ஒருவர் தம்மேல் கவலையாயிருக்கிறார்' என்ற நிச்சயமேயாம். ஒரு பையன் தனக்குக் காயமேற்பட்டால் உடனே தன் தாயிடம் ஓடிப்போவான்; ஏனென்றால் என் தாய்க்குத்தான் என் வேதனை எவ்வளவு என்று தெரியும்

என்று நினைக்கிறான். பல தாய்மார்கள் தங்கள் பிள்ளையைப் பார்த்து 'கடவுள் உன்னைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்' என்று சொல்லுவார்கள். அப்படிச் சொல்லும் அவர்களது நோக்கம் தங்கள் பிள்ளைகள் தீமை செய்யாதிருக்கும்படி ஓர் தண்டனையாக இருக்கவேண்டும் என்பதே. அதைக் கேட்டுப் பயப்படவேண்டுமென்பது அவர்களுடைய விருப்பம். ஆனால் அந்தப் பிள்ளை தன் தாயை எப்படி அறிந்துகொண்டது என்று யோசித்துப் பாருங்கள். தாய் தன் பிள்ளையிடம் எவ்வளவு கவலையோடிருந்தாலும் ஒருவேளை தண்டிக்கவும் நேரிடும்.

பிள்ளைகள் தங்கள் சிறுவயதுமுதல் தைரியமுள்ளவர்களாய் இருக்கும்படி நாம் எல்லோரும் ஆசைப்படுகிறோம். அதற்குத் தக்கதாக அவர்களுடைய மனதில் கடவுளைப்பற்றி ஏற்படவேண்டிய குணம் என்னவென்றால், 'கடவுள் தகப்பனைப்போல கவலைப்படுகிறார்' என்பதேயாம்.

சகித்துக்கொள்ளும் குணம் கீழ்ப்படிதலோடு அதிக சம்பந்தமுடையது. கீழ்ப்படிதலின் கட்டாயம் பிள்ளைகளுக்கு உடனே விளங்காது. ஆனால் தன்னை அடக்கிக்கொள்ளும் பெலன் இருந்தால் எந்தப் பிள்ளைக்கும் உண்மையான அறிவு சீக்கிரம் உண்டாகும். கடவுளின் கவலை பிள்ளைக்கு விளங்கினால் அவருடைய அன்பை உணர்த்துவது கஷ்டம் அன்று. அன்பினால் தண்டனை அவசியம். ஆனால் பிள்ளையின் மனதில் நாம் முதலாவது ஸ்தாபிக்கவேண்டிய எண்ணம் அன்புதான். அப்பொழுது ஒருவேளை தண்டனை ஏன் அவசியமென்று காட்டுவது அவ்வளவு கஷ்டமாய் இருக்காது. நாம் தண்டனையை முதலாவது படிப்பிக்கிறோமேயன்றி அன்பின் வல்லமையை உணர்த்தாமல் இருக்கிறோம். கடவுள் கையில் பிரம்பைப் பிடித்துக்கொண்டு எந்தப் பிள்ளையைத் தண்டிக்கலாம் என்று சந்தோஷத்தோடு காத்துக்கொண்டிருக்கிறார் என்கிற உணர்ச்சி உண்டாகும். கடவுளுக்கு இருக்கிற

ஒரு குணம் நமக்கும் இருக்கவேண்டும். ஒருநாள் அவசிய மான கட்டளை எந்த நாளும் அவசியம். நன்மை எப்பொழு தும் நன்மையேயாம். தீமை எப்பொழுதும் தீமையேயாம். பிள்ளை கஷ்டத்தோடு இதை நம்புகிறது. ஏனென்றால் பெரி யவர்கள் எத்தனையோ சமயங்களில் நன்மை தீமையை மாறி மாறிச் செய்வார்கள்.

ஒரு தாய் தன் மகனைக் கூப்பிட்டு, சாப்பிடுகிறதற்குமுன் கைகழுவச் சொன்னாள். 'ஏன் கைகழுவாமல் வருகிறாய், அப்பா, நான் எப்பொழுதும் கைகழுவிவிட்டுச் சாப்பிட வர வேண்டுமென்று சொல்லுகிறதில்லையா?' என்று கேட்டாள். அதற்குச் சிறுவன் 'இல்லை, அம்மா, ஒருநாள் மறந்துவிட் டீர்கள்' என்றான். மோசத்திலிருந்து பிள்ளைகளைக் காப் பாற்றும்படியாகப் பெரியவர்கள் அடிக்கடிச் சிறுவர்களின் மனத்தில் கொடுமையான குணத்தை உண்டாக்குகிறார்கள். பிள்ளை ஒரு பூச்சியை எடுத்துப் பார்க்கிறது. தாய் பயத் தோடு அதைக் கவனித்து 'அதைக் கீழே போடப்பா, உன் னைக் கடிக்கும், வந்து நசுக்குகிறேன்' என்றாள். தாய் வேறு ஒன்றும் சொல்லுகிறதில்லை. பூச்சிகளுக்குத் தங்களைக் காப் பாற்றும்படியாக விசேஷித்த சக்திகள் உண்டு என்று காட்டு கிறதில்லை. பிள்ளை எந்தப் பூச்சியையும் நசுக்குவது வேடிக் கை என்று நினைத்து வரவர கொடுமைசெய்வதில் சந்தோ ஷப்பட்டது. இது யாருடைய தப்பு? பிள்ளை பூனையின் வாலை இழுத்தால், 'அப்படிச் செய்யக்கூடாது, பூனை உன்னைக் கடிக்கும்' என்று சொல்லாமல் பூனைக்கு ஏற்படும் வேதனை என்ன என்று காட்டவேண்டும். பிள்ளையின் மனம் நம் மனத்தைப்போன்றதென்று கருதலாகாது.

உண்மை உடனே பிள்ளைக்குத் தெரியும் என்று நாம் நினைக்கக்கூடாது. பிள்ளை வெவ்வேறு சம்பாஷணைகளின் மூலமாய் உண்மை என்ன என்று கண்டுபிடிக்கவேண்டிய தாய் இருக்கும். மனோபாவனா சக்தியை வெளிப்படுத்தப்

பாஷையை உபயோகிக்கிறோம். பிள்ளைக்கு வித்தியாசம் உடனே தெரியமாட்டாது. ஆனால் இரண்டு காரியங்களுக்கும் பிரயோஜனமாகும்படிப் பேசும் சக்தியைச் சரியாய் உபயோகிக்கப் பிள்ளையைப் பழக்கலாம்.

மரியாதை என்னும் குணம் கட்டாயத்தினால் வராது ஆனால் பெரியவர்கள் சிறுவர்களுக்கு எவ்வளவு மரியாதை காட்டுகிறார்களோ அவ்வளவு மரியாதையையே நாம் பிள்ளைகளிடத்தில் திரும்ப எதிர்பார்க்கலாம். பிள்ளைகளுடைய பிரயாசம் நமக்கு எவ்வளவு கேவலமாய்த் தோன்றினாலும் அது உண்மையான முயற்சி என்று அறிந்து அதை மரியாதையோடு ஏற்றுக்கொள்ளவேண்டும். வகுப்பில் செய்த ஒரு சிறு சாமானைப் பிள்ளைகள் எல்லாரும் வீட்டுக்குக் கொண்டு போகலாம் என்று ஒரு உபாத்தினியம்மாள் சொன்னார்கள். சற்று நேரத்தில் ஒரு பையன் திரும்ப ஓடிவந்து அதிகமாய் அழுதான். உபாத்தினியம்மாள் விசாரித்தபொழுது அவன் 'என் தாயார் அதைப்பார்த்துச் சிரித்து நெருப்பில் எறிந்து போட்டார்கள்' என்றான். அவன் மனம் குத்துண்டது. இன்னொரு குடும்பத்தில் தாயின் பிறந்தநாளுக்குப் பிள்ளைகள் எல்லாரும் வெவ்வேறு சின்ன வெகுமதிகளை ஆயத்தம் பண்ணப் பிரயாசப்பட்டுக் கொண்டிருந்தார்கள். நாலுவயதுள்ள பெண்ணுக்கு ஒன்றும் செய்யத்தெரியவில்லை. ஆனால் மற்றவர்கள் தங்கள் வெகுமதிகளைக் கொடுத்தபொழுது இந்தப் பெண் தனக்கு இருந்த ஒரு பொம்மையைத் தன் தாயினிடத்தில் கொடுத்துவிட்டாள். அதைக் கண்டபோது தாய்க்கு மெத்த சந்தோஷமுண்டாயிற்று. தன் மகளின் ஈவு உண்மையான அன்பின் அடையாளமாக இருந்தது. தாம் சிருஷ்டித்த பிள்ளைகளின்மூலமாய்க் கடவுளுக்கு வரும் பூரண சந்தோஷம் அந்த நிமிஷத்தில் தாய்க்குத் தெரிய வந்தது.

எந்த மதத்திலும் கடவுளைப்பற்றி நாம் கற்பிக்கும் பொழுது நம்முடைய நோக்கம் என்ன? ஒவ்வொரு பிள்ளையும் சமூகத்தின் நன்மைக்கேன்று தானுகவே தெரிந்துகொள்ளும் செயல். இந்த வாக்கியத்தில் இருக்கும் பொருளை ஒவ் ஒவ்வொன்ருகச் சோதித்துப் பார்த்தால் அதில் எவ்வளவு கருத்து அடங்கியிருக்கிறது என்று நமக்குத் தெரியவரும். 'தெரிந்துகொள்ளுதல்' என்று சொல்லும்பொழுது படிக்க வேண்டிய சக்தி அவசியம் என்று தெரிகிறது. படிக்க வேண்டிய காரியங்கள் என்னவென்ருல் :—

1. மனுஷரால் தீமைக்கும் நன்மைக்கும் குறிக்கப்பட்டிருக்கிற வித்தியாசங்களைக் கவனிக்கவேண்டும். இது எல்லா விதமான நிலைமைகளிலும் தெரிகிறது. ஒரு அந்நியன் ஒரு புதிய தேசத்திற்காவது ஒரு புதிய பட்டணத்திற்காவது வரும்பொழுது அந்த இடத்தில் இருக்கிற புதிய பழக்க வழக்கங்களைப் படித்துக் கவனித்து அவைகள் சமூகத்தின் நன்மைக்கென்று செய்வது அவசியமோ இல்லையோ என்று யோசித்துத் தீர்மானம் பண்ணவேண்டும். வீட்டுப் பழக்கங்களிலும் வகுப்பு வழக்கங்களிலும் இப்படியே செய்வது மிகவும் அவசியம். இதை உண்மையாய்ச் செய்யப் போதுமான அறிவு ஏற்படும்பொழுதுதான் கடவுளின் சித்தத்துக்கும் மனுஷரின் செய்கைக்கும் வித்தியாசம் உண்டு என்று உணர்ந்து பழக்கவழக்கங்களை மாற்ற நமக்குத் தைரியம் ஏற்படுகிறது.

2. தானே செய்வது அவசியம். பெரியவர்களின் கட்டாயத்திற்காகவாவது ஏதோ ஒருவருடைய நற்புத்தியின் படி நடக்கவேண்டுமென்ற நோக்கத்தோடாவது ஒரு காரியத்தைச் செய்வது சரி என்று நினைப்பதால் மோசம் நேரிடும். கடவுள் மனுஷருக்குக் கொடுத்திருக்கிற விசேஷித்த ஈவு என்னவென்ருல் சுயசித்தமேயாம். ஒவ்வொருவனும் இதைச் சரியாய் உபயோகிக்கப் பழகவேண்டும். பல

பெற்றோர்கள் தம் பிள்ளைகளை அதிகக் கண்டிப்பாய் வளர்க்கிறார்கள்; ஆனால், பிற்காலத்தில் அவர்களுக்குத் தாமாகவே நன்மை தீமைகளைத் தீர்மானிக்கும் சக்தி இல்லை என்று காணும்பொழுது விசனப்படுகிறார்கள்.

3. 'சமூகத்தின் நன்மை' என்பதைக் கவனித்துப் பார்க்கலாம். தானாகவே தெரிந்துகொள்ளவேண்டும் என்று சொன்னபோதிலும், தனக்காக ஏதொன்றையும் செய்வது உயர்ந்த நோக்கம் அன்று. மற்றவர்களின் நன்மையை யோசிக்கும் சக்தியைப் பிள்ளைகளின் ஜீவியத்தில் ஸ்தாபிக்கப் பிரயாசப்படவேண்டும். இதிலிருக்கும் இன்னொரு விஷயத்தைக் கவனிக்கத் தவறலாகாது; அதாவது சமூகத்தில் நாம் பங்குபெறும்பொழுது, மற்றவர்களுக்கு வரும் புகழ்ச்சியிலும் இகழ்ச்சியிலும் நாமும் பங்குபெற வேண்டியவர்களாயிருக்கிறோம்.

4. 'செயல்' என்று சொன்னதினால் தீர்மானம் என்ற பொருளைமட்டும் கொண்டாற் போதாது என்று தோன்றுகிறது. நன்மை எதுவென்று உணர்ந்துகொண்டபின் அந்தப் பாதையில் நடக்காவிட்டால் அகோரமான பாவத்திற்கு இடம் கொடுக்கிறோம். இதனாலேதான் பழக்க வழக்கங்கள் அவ்வளவு விசேஷமாகின்றன. ஒரு தனிச்செயலினால் நாம் நம்முடைய குணத்தை வெளிப்படுத்துவதில்லை. நாளுக்கு நாள் நாம் என்ன செய்கிறோம் என்பதைக் கவனித்து மற்றவர்கள் நம்மை ஏற்றுக்கொள்ளுகிறார்கள்; அல்லது தங்கள் சமூகத்திலிருந்து நம்மை விலக்கிவிடுகிறார்கள். இக்காரியங்களைக்குறித்து நாம் ஆராய்ந்துகொண்டிருக்கும்பொழுது சில விஷயங்கள் நம்முடைய ஞாபகத்திற்கு வருகின்றன. சரித்திரம் படிக்கிறவர்களுக்குள் சமூகத்தின் நன்மையைப்பற்றிய அபிப்பிராயங்கள் அதிகமாய் மாறிவந்திருக்கின்றன என்று தோன்றும். முன்காலத்தில் காட்டுமனிதர் ஒருவருக்கொருவர் எவ்வளவு அற்பவிரோ

தம் ஏற்பட்டாலும் உடனே ஒருவரை ஒருவர் எதிர்த்து மடிந்தனர். இப்பொழுது மனிதர்கள் நாகரீகத்தில் முன்னேறி வந்திருப்பதால் சமாதான முறையையே தெரிந்து கொள்ளுகிறார்கள். முன்காலத்து ஜனங்களுக்கு அடிமைகளை வைத்துக்கொள்வது பாவமாகத் தோன்றவில்லை. இப்பொழுதோ எல்லாத் தேசங்களிலும் இந்த வழக்கத்தை நிறுத்தப் பிரயாசப்படுகிறார்கள். அப்படியே நாகரீகம் வளருந்தோறும் எது தீமை எது நன்மை என்பதைப்பற்றி மனிதரது அபிப்பிராயமும் மாறிக்கொண்டே வரும். தேசங்களின் வித்தியாசங்களையும் மனதில் நினைத்துக்கொள்ளவேண்டும். பொய், உண்மை, மரியாதை, பொறுமை இப்படிப்பட்டவைகள் எல்லாத் தேசங்களிலும் ஒரேவிதமாய்க் கையாடப்படவில்லை. இன்னும் ஒரு வித்தியாசத்தைப் பார்க்கலாம். அதென்னவென்றால், ஒரு சிறு குடும்பத்தில் செய்யக்கூடிய ஒரு காரியம் சரியாய்த் தோன்றலாம்; ஆனால் அதே காரியம் இருநூறு பிள்ளைகளுள்ள ஒரு பெரிய பள்ளிக்கூடத்தில் தப்பாகக் காணப்படலாம். அதனாலே எது தீமை, எது சரி என்று சொல்லும்பொழுது அதை ஒட்டிய இந்த வெவ்வேறு வகையான கொள்கைகளையும் நாம் மனதிலே நினைத்துக்கொண்டு தீர்மானம் பண்ணவேண்டும்.

மார்க்கத்தின் ஒழுங்கைப்பற்றித் திட்டமாய்ப் படித்துக் கொடுப்பது முன்கூறிய காரணங்களினால் மிகவும் கஷ்டமாகக் காணப்படுகிறது. மார்க்க விஷயத்திலே மனிதர் கடவுளோடும் மற்றவர்களோடும் கடவுளின் உலகத்தோடும் ஐக்கியமாய் ஜீவியம்பண்ணப் பிரயாசப்படுகிறார்கள். எல்லா மார்க்கங்களிலும் தெரிகிற காரியங்கள் என்னவெனில் பயம், ஆச்சரியம், வணக்கம், சமாதானந்தேடும் ஆசை, ஜீவியத்தைக் காக்கும் கவலை, அன்பு, பரிதாபம், பாடுபடும் சக்தி, தேசாபிமானம், விசுவாசம் இப்படிப்பட்ட உணர்ச்சிகள் உயர்ந்த நோக்கத்தையடையும்பொருட்டே உபயோ

க்கவேண்டும் என்பதே. இந்த நோக்கத்தைப் பெறும்படி மறுபடியும் முன் யோசித்த வாக்கியத்தை திரும்பவும் பார்க்கலாம்.

---

## ஒவ்வொரு பிள்ளையும் சமூகத்தின் நன்மைக்கென்று தானாகவே தெரிந்துகொள்ளும் செயல்

மார்க்க விஷயங்களிலும், படிப்பு விஷயங்களிலும் குடும்ப விஷயங்களிலும் இதைச்சரியாய் நிறைவேற்ற முடியுமானால் இந்த உலகம் பாவத்தின் அடிமைத்தனத்திலிருந்து முன்னேறி பரலோக ராஜ்யமாக மாறும்.

---

## மாணவர்கள் ஆராய்வதற்கு ஏற்ற ஓர் அப்பியாசம்

கீழே (தெரிகிற) கதையை பல வயதுப் பிள்ளைகளுக்குத் தனித்தனியே சொல்லி ஒவ்வொரு பிள்ளையிடத்திலும் இரண்டு கேள்விகளைக் கேட்கலாம்.

1. கதையில், தெரிகிற பிள்ளைக்கு எந்தத் தண்டனை சரி?

2. ஏன் இந்தத் தண்டனை உனக்குச் சரியாய்த் தோன்றுகின்றது?

---

## பிள்ளைக்குச் சொல்லவேண்டிய கதை

ஒரு வீட்டில் ஆறு வயதான ஒரு பெண் இருந்தாள். அந்தப் பிள்ளைக்கு எல்லாவிதமான சாயங்களும் நிறைந்த

ஒரு பெட்டி இனுமாகக் கிடைத்தது. அந்தவீட்டில் நாலு புது நாற்காலிகள் இருந்தன. தாய் அந்தச் சமயத்தில் எங்கேயோ வெளியே போயிருந்தார்கள். பிள்ளை நாற்காலிகளைப் பார்த்து, 'நான் இவைகளுக்குச் சாயம் போட்டால் அம்மா வந்து பார்த்து சந்தோஷப்படுவாள்' என்று நினைத்து அவைகளுக்குச் சாயம் பூசினது. தாய் வீட்டுக்குத் திரும்பி வந்து நாற்காலிகள் எல்லாம் கெட்டுப்போயிருந்ததைப் பார்த்தாள். நீ தாயாய் இருந்தால் என்ன செய்திருப்பாய்? ஏன்?

உபாத்தியாயராகிய நாம் சிறுவர்களை நடத்திக்கொண்டேயிருக்கும்பொழுது நமது அனுபவத்திலிருந்து தாராளமாய்க் கொடுப்போமாக. மற்றெல்லாக் கடமைகளைப் பார்க்கிலும் கடவுளின் குணத்தை நமக்குத்தெரிந்த உண்மைக்குத் தக்கதாக தெளிவாக்குவது நமது விசேஷித்த சிலாக்கியமாகும். நீதியின் பாதையில் ஒரு சிறு பிள்ளையை நடத்துவதைப்பார்க்கிலும் பெரிய ஊழியம் வேறே ஒன்றும் இல்லையே.



C. L. S. PRESS, MADRAS—1929